# "லக்ஸ் டாய்லட் சோப் மிகவும் அற்புதமான அழகு சாதனம்"



என்று சொல்கிறார்

பத்மினி




இனிய மணத்துடன் கூடிய
இந்த வெண்மையானதும்
சுத்தமானதுமான சோப்
உங்கள் சருமத்தை வசீகர
மாகச்செய்யும்!

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 296-X30 TM




மதராஸ்

பிரபாத் - சாகர் - ஸரஸ்வதி

மற்றும் தமிழ் நாடெங்கும்

# ஒரு டோஸ்

இம்மருந்து




## உட்கொண்டால்

## அஜீர்ணத்தை குணப்படுத்துகிறது

ஆம்! ஒரே டோஸ் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் அஜீர்ணத்தையும், வலியையும், அசௌகரியத்தையும் போக்குகிறது. மார்வலி, உப்புசம் குமட்டல், புளியேப்பம், வயிற்றுவலி முதலிய நோய்களை அதிசீக்கிரமாகவும் ஆச்சரியகரமாகவும் குணமாக்கும் சக்தி இம்மருந்துக்கு எப்படிக் கிடைத்தது தெரியுமா? மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் சிறந்த சாஸ்திரிய முறையில் தயாரிக்கப்பட்டிருப்பதனால்தான்.

**சாப்பாட்டு நேரங்களில்**
**சந்தோஷம் அளிக்கிறது**




ஏன் கஷ்டப்பட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்? இன்றே ஒரு டோஸ் பரீக்ஷித்துப் பாருங்கள்; ஆனால் அசல் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடரே வாங்குகிறீர்களா பாருங்கள். "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்று கையெழுத்து புட்டி மீதும், டப்பி மீதும் இருக்கவேண்டும்.

## மக்ளீன் பிராண்ட்
## ஸ்டமக் பௌடர்

வியாபார விவரங்களுக்கு: ஜே. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

# சிறந்த சர்வகலாசாலையின் சிதைந்த தோற்றம்



குப்த மன்னர்களின் ஆட்சி செழித்திருந்த காலத்திலே ஸ்தாபிக்கப் பட்ட னளந்தா சர்வகலாசாலை விரைவிலேயே ஆசியா கண்டத்தி லுள்ள மிகப்பெரிய சர்வகலாசாலைகளில் ஒன்றாகத் திகழ்ந்தது. அதில் படித்த 10,000 மாணவர்களில் பெரும்பான்மையோர் கடல் கடந்த நாடுகளிலிருந்து வந்திருந்தனர். வெளிநாட்டு மன்னர்கள் கட்டுவித்த பிரத்தியோகமான ஹாஸ்டல்களில் அவர்கள் வசித்தனர். மாணவர் களுக்கு ஏழு தனிக் கல்லூரிகளில் கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டு வந்தது. மூன்று கட்டிடங்கள் நிரம்பிய பிரம்மாண்டமான புத்தக சாலையும் அமைக்கப்பட்டிருந்தது. மாணவர்களுக்கு உணவு, உடை வைத்திய சிகிச்சை ஆகியவை இலவசமாக அளிக்கப்பட்டன. மாண வர்கள் கல்விச் சிறந்து விளங்கியதற்கு இவை முகாந்திரமாயிருந்தன என்று அந்நாளில் வாழ்ந்த ஒரு பெரியார் கூறியுள்ளார். கி.பி. 12-ம் நூற்றாண்டிலே அந்நியர் படையெடுத்து அழிப்பதற்கு முன், 700 வருஷகாலமாக சுற்றியுள்ள நாடுகளுக்கும் மக்களுக்கும் அறிவின் அகண்ட தீபமாகத் துலங்கியது னளந்தா சர்வகலாசாலை.

# டன்லப்




பாட்னாவிலிருந்து கிழக்கே செல்லும் சாலையில் 29 வது மைலில் பக்டியார்பூர் இருக்கிறது. அங்கிருந்து தெற்கே பிரிந்து செல்லும் கிளை சாலையில் 19 மைலில் உள்ள பிஹார் ஷரீப்பிலிருந்து ஒரு சிறிய சாலை னளந்தா ஸ்டேஷனுக்குப் போகிறது. இது 6 மைல் தூரம். ஸ்டேஷனிலிருந்து னளந்தா ருசுக இருக்குமிடத்திற்கு 2 மைல் போகவேண்டும். பாட்னாவிலிருந்து மொத்தம் உள்ள 56 மைல் தூரமும், வருஷம் முழுவதும் பிரயாணம் செய்யக்கூடிய சாலைகள் இருக்கின்றன.

டன்லப் கண்டுபிடிப்பின் மூலமாக மோட்டார் பிரயாணம் பிரும்மானந்தத்தை அளித்து வருகிறது. அவர் பெயர் கொண்ட டயர்கள் எந்த நிலைமையிலும் பந்தோபஸ்தாகவும் சிறந்தும் விளங்குகின்றன.



○ 'மோட்டார் பிரயாண சுகங்கள்' என்னும் தொடரில் மூன்றாவது.




மதராஸ் ஆபீஸ் :

5/149, பிராட்வே

ஜி. டி., மதராஸ்

**ஜுவல் பதித்த ரோ. கோ. கை கடிகாரங்கள் ரூ. 18-8-0**



ஸ்விஸ் தயாரிப்பு. சரியான நேரத்தைக் காட்டும் கடிகாரங்கள். பத்து வருஷ உத்தரவாதம். ரோ. கோ. கேஸ். வட்டம் அல்லது நீண்ட சதுர வடிவம் 7 ஜுவல் ரூ. 18-8-0; உயர் ரகம் க்ரோம் கேஸ், ரேடியம் செகண்டு முள்ளுடன் ரூ. 20/-; ஸ்பெஷல் சைஸ் 8 ஜுவல் ரோ. கோ. கேஸ். ரூ. 23/-; நீண்ட சதுரம் க்ரோம் கேஸ் 8 ஜுவல் ரூ. 23/-; 15 ஜுவல் தட்டை வடிவம் ரூ. 30/-; நீண்ட சதுர வடிவம் 9 ஜுவல் ரோ. கோ. கேஸ் ரூ. 26/-; உயர்ந்தது ரூ. 28/-; 15 ஜுவல் ரோ. கோ. ரூ. 35/-; பாக்கெட் கடிகாரம் ரூ. 14/-.



சிகரெட் லைட்டர்: நிக்கல் கேஸ் வாட்டர் ப்ரூப் நிச்சயமானது. இதை வாங்கினால் ஆயுள் பூராவும் நீங்கள் நெருப்புக் குச்சி வாங்க வேண்டிய அவசியமே இல்லை. விலை ரூ. 2/-; உயர் ரகம் ரூ. 3/-; சிறந்தது ரூ. 4/- & 5/- ஒரு டஜன் கற்கள் அணா 14.
யு. எஸ். ஏ. பவுண்டன் பேனாக்கள்: ரோல்டு கோல்டு நிப்பு. கிளிப்புடன் ரூ. 2/-; உயர்ந்தது ரூ. 2/8/- கோல்டு கேப்புடன் (பார்க்கர் 51 போன்றது) ரூ. 5/8/-; உயர்ந்தது ரூ. 6/8/- தபால் செலவு அணா 14. இரண்டு ரக ஆர்டர் செய்வோருக்கு தபால் செலவு இனாம்

**IMPERIAL WATCH CO. (K)**

Post Box No. 12220 ... CALCUTTA - 5

அமெரிக்கன்

## சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்



தேனீர், சிற்றுண்டி, வென்னீர், முதலியன தயாரிப்பதற்கு இப்புதிய ரக ஸ்பிரிட் ஸ்டவ்வை வாங்குங்கள். ஓர் சிறிய அளவு ஸ்பிரிட் உங்களது தேவையைப் பூர்த்திசெய்யும். விலை ஒன்று ரூ. 4-8-0 தபால் செலவு ரூ. 1-8-0 தனி.

**ஸ்டாக்குகள் விற்பனையாகி வருகின்றது**

**இன்றே வி. பி. பி. மூலம் ஒன்று ஆர்டர் செய்யுங்கள்**

○●○

## வீட்டில் சினிமா

இந்தச் சின்ன யந்திரம் மூலமாக, வீட்டில் பளிச்சிட கலர் சித்திரங்களைப் பார்த்து, பெரிய சினிமாவின் மூலம் கிடைக்கும் ஆனந்தத்தை அடையலாம். சினிமா சித்திரங்களுடன் விலை ரூ. 5-0-0 தபால் செலவு 1-8-0 தனி. கடிதப் போக்கு வரத்து ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்.

விவரங்களுக்கு :

**MILAP TRADING CO., (KL)**

KANWARIGANJ, ALIGARH, U.P. (India)




சென்னையில் காஸினோ, ஸ்ரீ கிருஷ்ணா ஆகிய தியேட்டர்களில் காணலாம்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்

மைசூர், பம்பாய்:
ஸ்ரீ என். வி. கோபால் ஷெட்டி, பெங்களூர் ஸிடி

தென் ஆற்காடு:
வடுகநாதன் பிக்சர்ஸ், சிதம்பரம்

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி:
ஸ்ரீ எஸ். என். சோமசுந்தரம், காரைக்குடி

மலபார், கொச்சி:
சென்ட்ரல் பிக்சர்ஸ், கோட்டயம்

திருச்சி, தஞ்சாவூர்:
சந்திரா பிக்சர்ஸ், திருச்சிராப்பள்ளி

சேலம்:
ஸ்ரீநிவாஸ பிலிம்ஸ், நாமக்கல்

கோயமுத்தூர், நீலகிரி:
தனலக்ஷ்மி பிலிம்ஸ், சேலம்

ஸிலோன், எப். எம். எஸ்.:
ஸிலோன் தியேட்டர்ஸ் லிமிடெட், கொழும்பு

சென்னை நகரம்: மெஸர்ஸ். கிர்தர் பிக்சர்ஸ், சென்னை

MUHIL

இதர பிரதேசங்களுக்கு விண்ணப்பிக்கவும்:

**மெஸர்ஸ். அருணா பிலிம்ஸ், சென்னை - 17**

அல்லது

**ஸ்ரீ என். வி. கோபால் ஷெட்டி, பெங்களூர் ஸிடி**

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11 இதழ் 7 | 1951 செப்டம்பர் 16 | கர ௵ ஆவணி 31உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்கி

மலர் 11

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 7

# அதிர்ச்சி மருந்தின் அதிசய பலன்

நேருஜியின் அதிர்ச்சி மருந்து கைமேல் அற்புதமான பலனை அதி சீக்கிரத்தில் கொடுத்து விட்டது.

காங்கிரஸ் காரியக் கமிட்டித் தலைவர்கள் ராஜிநாமா செய்து விட்டார்கள். காரியக் கமிட்டியை மாற்றி அமைக்க முடியாது என்று பிடிவாதம் செய்த அக்ராசனர் தாண்டனும் ராஜிநாமா செய்வதைத் தவிர வேறு வழியிராமற் போய்விட்டது.

தங்களைக் காட்டிலும் காங்கிரஸ் பெரிது, தேசம் பெரிது, நேருஜி முக்கியமானவர் என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டதற்காக அவர்களைப் பாராட்டுகிறோம்.

"நேருஜிக்கு வழி விட்டுவிட்டு நீங்கள் எல்லோரும் கூண்டோடு வெளியேறி விடுங்கள்" என்று அ. இ. கா. கமிட்டி கட்டளையிடுவதற்கு முன் அவர்கள் காங்கிரஸிலிருந்து நாசூக்காக வெளியேறியது புத்திசாலித் தனமான காரியம் அல்லவா?

காரியக் கமிட்டியிலிருந்து நேருஜி ராஜிநாமா செய்ததன் மூலம் ஏற்படவிருந்த பிளவையும், பேராபத்தையும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் தாண்டனும் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்ததன் மூலம் தவிர்த்ததற்காக அவர்களை மறுபடியும் வாழ்த்துகிறோம்.

மிகவும் நெருக்கடியான இந்தச் சமயத்தில் மகத்தான பொறுப்பு வாய்ந்த பிரதம மந்திரி பதவியை வகித்து வரும் வீரர் நேருஜி, காங்கிரஸ் அக்கிராசனர் பதவியையும் ஏற்றுக் கொண்டு காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தூய்மைப்படுத்த முன் வந்தது தேசத்தின் நல்ல காலம் தான்! அதிர்ஷ்டம் தான்!

* * * *

முதலாவது உலக மகா யுத்தம் ஆரம்பமாவதற்கு முன், அந்த யுத்தத்தின் விதியை நிர்ணயிக்கக் கூடிய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. ஜெர்மானியர் போர் வெறி கொண்டவர்கள், மகா கோரமாக யுத்தம் செய்வார்கள் என்று பிரிட்டிஷார் தங்கள் சிப்பாய்களுக்கு எடுத்துக் கூறி வந்தார்கள். ஜெர்மானியரோவெனில் பிரிட்டிஷ் சிப்பாய்கள் சுகவாசிகள், போர் முனையில் அவர்களை ஊதித்தள்ளி விடலாம் என்று தங்கள் சிப்பாய்களிடையே பிரசாரம் செய்து வந்தார்கள்.

எதிரிகளின் பலத்தை மறைக்காமல், அலட்சியமாக நினைக்காமல் பிரிட்டிஷார் தங்கள் சிப்பாய்களுக்கு எடுத்துச் சொன்னதால், அவர்கள் எடுத்த எடுப்பிலேயே போர் முனையில் ஆவேசத்துடன் யுத்தம் செய்யலாயினர். ஜெர்மன் சிப்பாய்கள் பிரிட்டிஷ் சிப்பாய்களை அலட்சியமாக நினைத்துப் போரில் ஈடுபட்டார்கள்.

முதலாவது மகா யுத்தத்தில் பிரிட்டிஷார் வெற்றி யடைந்ததற்கும் ஜெர்மானியர் தோல்வியுற்றதற்கும் மேற்படி சம்பவம் ஒரு முக்கிய காரணம் என்று அப்போது இராணுவ நிபுணர்கள் அபிப்பிராயப்பட்டனர்.

எனவே தங்களிடம் உள்ள குறைகளை அறிந்து கொள்வதே பலத்தின் முக்கிய அம்சம் என்று ஏற்படுகிறது அல்லவா?

இந்திய தேசிய காங்கிரஸ் தன்னைப் பீடித்துள்ள நோய்களை, அதாவது குறைகளையும் ஊழல்களையும் என்றுமே மறைத்து வைத்ததில்லை.

காங்கிரஸ் சாத்துவிகக் கொள்கையிலிருந்து அணுவளவு பிறழ்ந்ததற்காக மகாத்மா காந்தி மாபெரும் இயக்கத்துக்கே முற்றுப்புள்ளி வைத்துத் தேசம் முழுவதையும் திடுக்கிடச் செய்தது உண்டு.

அவ்விதம் செய்ததால் காங்கிரஸ் முன்பு இருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு அதிக பலம் பெற்று ஒப்பற்ற ஸ்தாபனமாக மிளிர்ந்தது. மக்களிடையே அதன் செல்வாக்கு அபரிமிதமாகப் பெருகியது.



சென்ற காலம்

நோயை மூடி வைப்பது போலக் குறைகளை மூடி வைப்பது ஆபத்தாக முடியுமேயன்றி, அதனால் எள்ளளவும் நன்மை ஏற்படாது.

இந்த உண்மையை அறியாத சில பிருகஸ்பதிகள் காங்கிரசில் ஊழல்கள் மலிந்து விட்டன என்பதை நேருஜியே ஒத்துக்கொண்டு விட்டதால் இனி விஷயம் முடிந்து விட்டது என்று ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இனி காங்கிரசினால் எவ்வித நன்மையும் ஏற்படப் போவதில்லை என்று சத்தியம் செய்கிறார்கள். செல்வாக்குள்ள சிலர் தாய் ஸ்தாபனத்திலிருந்து விலகிக் கொண்டு குட்டிக் கட்சிகளையும் ஆரம்பித்திருக்கிறார்கள்.

எல்லோரும் நெல்லை உலர்த்துகிறார்கள், எலி வாலை உலர்த்தியது என்பதற்கிணங்க மற்றும் சில சில்லறைக் கட்சிகளும் வரப் போகும் தேர்தலில் வெற்றி பெறலாம் என்ற சபலம் காரணமாகக் கூட்டங்கள் கூடிக் கோவிந்தா போடத் தொடங்கி யிருக்கிறார்கள்.

இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை அறுபது ஆண்டுகளுக்கு மேலாக அரும் பாடுபட்டு நிர்மாணிக்கப்பட்ட கோட்டை—சுதந்திரப் போரில் முப்பது கோடி வீரர்களுக்கு அடைக்கலம் அளித்து வெற்றியையும் வான் புகழையும் ஈட்டித் தந்த இணையற்ற ஸ்தாபனம்.

அது தொண்டு, தியாகமென்ற கற்களால் கண்ணீர், உதிரமென்ற சிமெண்டைக் கொண்டு புனித தேச பக்தர்களால் நிர்மாணிக்கப்பட்டது. எனவே அதை அணுகுண்டுகளால் தகர்க்க முடியாது; காலத்தினால் அழிக்க முடியாது.

அத்தகைய தெய்வீக பலம் பொருந்திய கோட்டையில் சில பழுதுகள் ஏற்பட்டுள்ளன என்பது உண்மையே. அதற்காக அந்தக் கோட்டையிலிருந்து வெளியேறி விடுவது அறிவுடைமையாகுமா! அதை இடித்துத் தகர்த்து விடவேண்டும் என்று சொல்லுவது நேர்மையாகுமா!

அதைக் காட்டிலும் பலம் பொருந்திய கோட்டையைச் சமீப காலத்தில் யாரும் நிர்மாணித்துவிட முடியாது.

எனவே சிற்சில இடங்களில் கற்கள் பெயர்ந்து இடிந்து கிடக்கும் காங்கிரஸ் கோட்டையைச் சீர்திருத்தி அதைப் புனருத்தாரணம் செய்து பலப்படுத்த வேண்டும்.

காங்கிரஸ் தலைமைப் பதவியை இப்போது நேருஜி ஏற்றுக்கொண்டு விட்டதால் மேற்படி புனருத்தாரண வேலை இனி துரிதமாக நடைபெறும் என்று நம்பலாம்.

* * *

புது டில்லியில் நடந்த அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் நேருஜி தாம் காங்கிரஸ் அக்கிராசனராக இருக்க வேண்டுமாயின் காங்கிரஸ் வாதிகள் சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

1. ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் சிறிதும் அபிப்பிராய பேதமின்றி ஏகோபித்து முன்னேறிச் செல்லுவது போல நாமும் ஒற்றுமையுடன் முன்னேறிச் செல்ல வேண்டும்.

2. காங்கிரசின் கொள்கைகள் என்ன என்பதைக் காங்கிரஸ் வாதிகள் நூறு சதவிகிதம் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

3. தேர்தல்களைக் காட்டிலும், தேர்தல்களில் வெற்றி பெறுவதைக் காட்டிலும் கொள்கைகள் தான் மிகவும் முக்கியமானவை என்று உறுதி கொள்ள வேண்டும்.

4. வரப்போகும் தேர்தல்களில் கலந்து கொள்ளும் காங்கிரஸ் அபேட்சகர்கள் மூன்று யோக்கியதாம்சங்கள் வாய்ந்தவர்களாக இருக்க வேண்டும். முதலாவது யோக்கியப் பொறுப்பு, இரண்டாவது யோக்கியப் பொறுப்பு, மூன்றாவது யோக்கியப் பொறுப்பு. அத்துடன் திறமையுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.



இடைக் காலம்

இந்த நாலு நிபந்தனைகளையும் நிறைவேற்றுவது என்று மாகாண காங்கிரஸ் தலைவர்கள் திடசங்கல்பம் செய்து கொண்டால் காங்கிரஸ் ஸ்தாபனம் தூய்மை யடையும்.

இன்றைய நிலைமையில் காங்கிரஸ் வாதிகள் அந்த நிபந்தனைகளை நிறைவேற்றும்படி செய்யும் ஆற்றலும் உறுதியும் அக்ராசனர் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கும் நேருஜிக்கு ஏற்படுமா!

# வழிப் பிள்ளையாருக்குக் கூடைத் தேங்காய்!

கூடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்த கதையாக இருக்கிறது!

ஜப்பானிய யுத்தத்தினால் பெரிதும் கஷ்ட நஷ்டங்கள் அடைந்த சிறிய தேசங்கள் ஜப்பானிடமிருந்து நஷ்ட ஈடு கேட்பது இரக்கமற்ற காரியம் என்று அமெரிக்க சர்க்கார் மற்ற நாடுகளுக்கு உபதேசம் செய்தார்கள். ஆனால் அந்த உபதேசத்தை அவர்கள் சொந்த விஷயத்தில் அனுஷ்டிக்க மறந்து விட்டார்கள்; ஜப்பானுக்குச் சொந்தமான, ஜப்பானியர் வசிக்கும் தீவுகளையெல்லாம் சுருட்டிக் கொண்டு விட்டார்கள்!

ஜப்பான் சமாதான உடன் படிக்கையில் கையெழுத்திடுவதற்காக ஸான் பிரான்ஸிஸ்கோவில் நடந்த மகாநாடு முடிந்துவிட்டது. ஜப்பான் உள்பட நாற்பத்தொன்பது நாடுகளின் பிரதிநிதிகள் அதில் கையெழுத்திட்டுவிட்டார்கள். அமெரிக்கா ஜப்பானுக்குச் சொந்தமான தீவுகளை எடுத்துக் கொள்வது நியாயம்தான், ஜப்பானில் அமெரிக்கா துருப்புகளை வைத்துக் கொள்வதில் தவறு எதுவும் இல்லை என்று முத்திரை வைத்து விட்டார்கள். எனவே ஜப்பானுக்கு அரையே அரைக்கால் சுதந்திரம் கிடைத்திருக்கிறது!

மேற்படி மகாநாட்டில் நாற்பத்தொன்பது நாடுகள் கலந்து கொண்டன என்பது உண்மை. ஆனால் ருஷ்யாவும் இரண்டொரு சிறிய நாடுகளும் உடன்படிக்கையில் கையெழுத்திடவில்லை. சீனா மகாநாட்டுக்கு அழைக்கப் படவில்லை. இந்தியாவோ அதில் கலந்துகொள்ள மறுத்து விட்டது.

இதிலிருந்து அந்த நாற்பத்தொன்பது நாடுகளில் உள்ள ஜனத் தொகையைக் காட்டிலும் சற்றேறக்குறைய அதிக ஜனத் தொகையுள்ள நாடுகள் அந்த உடன்படிக்கையை ஆதரிக்கவில்லை என்றாகிறது அல்லவா!

• • •

ஸான்பிரான்ஸிஸ்கோவில் கையெழுத்தாகியுள்ள உடன்படிக்கையை ஜப்பான் பிரதம மந்திரி வரவேற்றிருக்கிறார்; அதில் கையெழுத்திட்ட நாடுகளுக்குத் தமது வந்தனத்தைத் தெரிவித்திருக்கிறார் என்று செய்திகள் கூறுகின்றன.

அவர் வேறு என்ன செய்வார்! தமது நாடு முழு அடிமையாக இருப்பதைக் காட்டிலும் அரையே அரைக்கால் சுதந்திரத்துடன் இருப்பது மேல் என்று அவர் கருதியிருக்கலாம்.

இந்தியாவின் இரண்டொரு கோரிக்கைகளை அமெரிக்கா ஏற்றுக் கொண்டிருக்குமாயின் ஜப்பான் சமாதான உடன்படிக்கைக்கு அதிக ஆதரவு கிடைத்திருக்கும். அது சமாதான உடன் படிக்கை அல்ல என்றும், புதிய யுத்த உடன்படிக்கை என்றும் சில பிரதிநிதிகள் குற்றம் சாட்டுவதற்கு இடம் ஏற்பட்டிராது.

இந்த நிலைமையில் வர்செயில்ஸ் உடன்படிக்கை ஜெர்மானியர்களின் மனக் கொதிப்புக்குக் காரணமாக அமைந்தது போல், ஸான்பிரான்ஸிஸ்கோ உடன்படிக்கை ஜப்பானியர்களின் மனக் கொதிப்புக்குக் காரணமாகாமல் இருக்குமா!

# கேந்திர நாடுகளில் சூறாவளி

மத்திய கிழக்கு நாடுகள் அல்லோல கல்லோலப்பட்டு வருகின்றன. அந்த நாடுகளில் அடித்து வரும் அரசியல் சூறாவளி நாளுக்கு நாள் உக்ரமாகி வருகிறது.



எதிர்காலம்?

'மத்திய கேந்திரம்' என்ற தலைப்பின் கீழ் 'கல்கி' இதழிலே சென்ற பிப்ரவரி மாதம் கட்டுரைத் தொடர் ஆரம்பமாயிற்று.

அதன்பின் மத்திய கேந்திர நாடுகள் பலவற்றிலும் சங்கிலித் தொடர்போல் பீறிட்டெழுந்த சம்பவங்கள் உலகத்தையே திடுக்கிட வைத்துள்ளன.

அந்தச் சம்பவங்களின் சுருக்கமான ஜாப்தாவை இங்கு தருகிறோம்.

1. சென்ற மார்ச்சு மாதம் பாலஸ்தீனில் ஐக்கிய நாடுகள் சபையின் பிரதிநிதி கொலையுண்டார்.
2. அந்தச் சம்பவம் நிகழ்ந்த சில தினங்களுக்குப் பின் ஈரான் பிரதம மந்திரி ஜெனரல் அலி ரஸ்மாரா கொலை செய்யப்பட்டார். அந்த நாட்டின் கல்வி மந்திரிக்கும் அதே கதி நேர்ந்தது.
3. பிரிட்டிஷ் — ஈரான் உடன்படிக்கையை ஈரான் சர்க்கார் கிழித்தெறிந்து விட்டு, ஈரானில் உள்ள பிரிட்டிஷ் எண்ணெய்க் கம்பெனியைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டார்கள்.
4. மத்திய கேந்திர நாடுகளில் ஒன்றான லெபனானில் பிரதம மந்திரி பதவி வகித்தவரைச் சிரியா தேசியக் கட்சியைச் சேர்ந்த ஒருவர் ஈவு இரக்கமின்றிச் சுட்டுக் கொன்றார்.
5. இருபத்தெட்டு வருஷ காலமாக திரான்ஸ் ஜார்டன் மன்னராக விளங்கிவரும் பிரிட்டனின் அத்தியந்த நண்பருமான அப்துல்லா சுட்டுக் கொல்லப்பட்டார்.
6. 1936-ம் வருஷத்தில் ஏற்பட்ட பிரிட்டிஷ் எகிப்து உடன்படிக்கையை ரத்துச் செய்யத்

# அவர் ஜோசியம்!




"இந்த வருஷம் யுத்தம் வராது" என்று ஜோசியம் கூறுகிறார் ஐ. நா. சபைக் காரியதரிசி டிரிக்வி லீ. அவரிடம் ஜோசியம் கேட்க இன்னும் பலர் வரலாம்.

தீர்மானித்திருப்பதாக எகிப்து சர்க்கார் பிரிட்டனுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கிறார்கள்.

மேலே குறிப்பிட்ட கோரச் சம்பவங்களில் சில மத்திய கேந்திர நாடுகளின் விதியையே முற்றிலும் மாற்றக் கூடியவை.

டிரான்ஸ் ஜார்டன் மன்னர் கொலையுண்டதால் என்ன விபரீதங்கள் ஏற்படக் கூடும் என்பது பற்றி இப்போது எதுவும் சொல்வதற்கில்லை.

பாரசீக எண்ணெய்த் தகராறைத் தீர்ப்பதற்காக இது வரையில் பிரிட்டிஷ் பிரதிநிதிகளுக்கும் ஈரான் பிரதிநிதிகளுக்கும் நடந்த பேச்சு வார்த்தைகள் வெற்றி பெறவில்லை. மேற்படி தகராறு முற்றி நிலைமை மோசமாகி விடுமாயின், அதுவே மூன்றாவது உலக மகா யுத்தத்துக்கு விதையாக அமைந்தாலும் அமையலாம்.

எகிப்தைச் சேர்ந்த பிரதேசங்களில் வைக்கப்பட்டிருக்கும் பிரிட்டிஷ் துருப்புகளை வாபஸ் செய்து கொள்ள வேண்டும்; எகிப்தின் பூரண சுதந்திரத்தை அங்கீகரிக்க வேண்டும்; சூடான்—எகிப்து உறவுக்கும் ஒற்றுமைக்கும் பிரிட்டன் முட்டுக்கட்டையாக இருக்கக் கூடாது;— இவை தான் எகிப்தின் கோரிக்கைகள்.

இந்தக் கோரிக்கைகளைப் பிரிட்டிஷ் சர்க்கார் அங்கீகரித்தாலன்றி எகிப்து பிரிட்டனுடன் உள்ள தொடர்பை அறவே கத்தரித்துக் கொண்டு விடும் என்று எகிப்து பிரதம மந்திரி நஹாஸ் பாஷா சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிப் பிரகடனம் செய்திருக்கிறார்.

இவ்வாறாக, மத்திய கேந்திர நாடுகளில் எழுந்துள்ள பிரச்னைகள் பிரிட்டிஷ் சர்க்காரைத் திணற அடித்து வருகின்றன; அந்தப் பிரதேசங்களிலிருந்து ஜான்புல் துரை வெளியேற வேண்டிவரலாமென்றும் தோன்றுகிறது. ஜான்புல் துரைக்கு நம் மனமார்ந்த அனுதாபங்கள்.

## ஸ்ரீ குணசிங்காவின் கோபம்

கொழும்பு, ஆகஸ்ட் 31உ.

மந்திரி குணசிங்காவுக்கு இவ்வாரம் பிரமாதமான கோபம் பிறந்து விட்டது. அதன் பலன் பத்திரிகை நிருபர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்டிக் காச்சு மூச்சென்று கத்தித் தீர்த்து விட்டார். காரணம் இந்திய வர்த்தகச் சங்கத்தைப் போல நல்ல பிள்ளைகள் என்று பெயரெடுத்துச் சர்க்காருடன் ஒத்துப் போக ஐரோப்பியர்கள் தயாராயில்லாததுதான். இவ்வார ஆரம்பத்தில் ஒரு ஐரோப்பிய ஸ்தாபனத்தின் பிரதிநிதிகளை அழைத்து அங்குள்ள சிப்பந்திகளை இலங்கையர் மயமாக்க வேண்டும் என்றும் இலங்கையரல்லாதவர்களைப் புதிதாக வேலைக்கு அமர்த்திக் கொள்ளப்படாதென்றும் ஸ்ரீ குணசிங்கா கோரினார். ஆனால் அவருடைய யோசனையை ஏற்க முடியாதென்று அந்த ஐரோப்பிய ஸ்தாபனப் பிரதிநிதிகள் ஸ்ரீ குணசிங்காவிடம் சொல்லி விட்டனர். இதுவும், ஐரோப்பியச் சமூகம் தம்மைக்

கொஞ்சங்கூட மதிக்காமலிருப்பதும், மந்திரி குணசிங்காவுக்குப் பொல்லாத கோபத்தை உண்டு பண்ணிவிட்டது. அவசரம் அவசரமாக நிருபர்கள் மகாநாடு ஒன்றைக் கூட்டினார். ஐரோப்பியர்களெல்லாம் காட்டைச் சூறையாடுகிறவர்களென்றும் இலங்கை எக்கேடு கெட்டாலும் அவர்களுக்குக் கவலையில்லையென்றும் வசைமாரி பொழிந்தார். இலங்கையர் மயமாக்கும் சட்டத்தை ஐரோப்பியர்கள்மீது கட்டாயமாகத் திணிக்கச் சட்டம் இயற்றுமாறு மந்திரி சபையை வற்புறுத்தப்போவதாயும் அந்தச் சட்டம் ஏற்கெனவே தம்முடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள இந்திய வர்த்தகச் சங்கத்தைப் பாதிக்காதென்றும் மற்றவர்களைக் கடுமையாகப் பாதிக்குமென்றும் மந்திரி அறிவித்திருக்கிறார். தாம் கொண்டுவரப் போகும் சட்டம் இந்திய வர்த்தகச் சங்கத்தைப் பாதிக்காதென்று அவர் சொல்லிய பொழுதிலும் இந்தியர்களைப் பாதிக்காதென்று சொல்லுவதற்கில்லை. இலங்கையர் மயமாக்கும் திட்டமே இந்தியர்களைத் தீர்த்துக் கட்டுவதற்காக ஏற்பட்டதுதானே!

## ஜினீவா மகாநாடு

கொழும்பு, செப்டம்பர், 6வ

ஜினீவாவில் நடைபெற்ற சர்வ தேச தொழில் ஸ்தாபனத்தின் வருடாந்திர மகாநாட்டுக்குப் போயிருந்த இலங்கை இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் அங்கு உபயோகமான பல காரியங்களையும் செய்து விட்டு வந்திருக்கிறார். உலகத் தொழிலாளர்களின் நிலைமையை உயர்த்தப் பாடுபடும் சர்வதேச தொழில் ஸ்தாபனத்துக்கு உண்மையில் இலங்கை இந்தியத் தொழிலாளர்களின் நிலைமையைப் பற்றி ஒன்றும் தெரியாது. இந்தக் குறையைப் போக்கவும் இந்தியத் தொழிலாளருக்கு இலங்கை அரசாங்கம் இயற்றும் கொடுமைகளைப் பற்றிப் பரிசீலனை செய்ய உடனே ஒரு விசாரணைக் கமிஷனை அனுப்பிவைக்க வேண்டுமென்று வற்புறுத்தவும் விரிவான ஒரு யாதாஸ்தை சர்வதேச தொழில் ஸ்தாபனத்தின் நிர்வாக சபையிடம் ஸ்ரீ ராஜலிங்கம் சமர்ப்பித்திருக்கிறார்.

பிரஸ்தாப யாதாஸ்தில் இலங்கையில் இந்தியர் குடியேறிய சரித்திரத்தையும், இந்தியத் தொழிலாளர்களை அனுப்பிக்கொடுத்து உதவுமாறு டில்லி அரசாங்கத்தினிடம் இலங்கை அரசாங்கம் பல சந்தர்ப்பங்களிலும் மன்றாடிக் கேட்டுக் கொண்ட விவரங்களையும் இலங்கை ஒரு சுதந்திர தேசமானவுடன் இந்தியர்களை அடக்கி யொடுக்கி நசுக்கி வெளியே தள்ள அடுக்கடுக்காகப் பல துவேஷச் சட்டங்களை இயற்றியுள்ளதையும் ஸ்ரீ ராஜலிங்கம் விரிவாக எடுத்துரைத்தார்.

இந்த அக்கிரமத்தைப் பற்றி விசாரணை நடத்திப் பரிகாரம் தேடிக்கொடுக்க சர்வதேச தொழில் ஸ்தாபனம் இலங்கைக்கு உடனே ஒரு கமிஷனை அனுப்ப வேண்டும். இது சாத்தியப்படாவிட்டால் இலங்கைக்கோ அல்லது அண்டை நாடுகளுக்கோ சமீபத்தில் வரக்கூடிய வேறு கமிஷன்களிடமேனும் இலங்கையில் எங்களது குறைகளைப்பற்றி விசாரிக்கும் பொறுப்பை ஒப்படைக்க வேண்டுமென்று ஸ்ரீ ராஜலிங்கம் மேற்படி ஸ்தாபனத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

## கண்டியில் தமிழ் விழா

மத்திய மாகாண தமிழ்ச் சங்க ஆரம்ப விழாவையும் இலங்கை தமிழ் எழுத்தாளர் ஆரம்ப விழாவையும் நடத்துவதற்கு அதன் கன்வீனர்கள் போட்டிருக்கும் திட்டத்தைக் கவனித்தால் மிகப் பெரிய தோரணையிலே தமிழ் விழாவைக் கொண்டாட அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களென்று தெரிகிறது. இந்த விழாக்களை பாரதியார் ஜனன தினமாகிய செப்டம்பர் 11-ம் தேதியன்று கொண்டாடுவதென்று முதலில் திட்டமிட்டிருந்தார்கள். ஆனால் பிரசங்கிகளுக்கும் மற்றவர்களுக்கும் வசதியாயிருக்க செப்டம்பர் 16-ம் தேதிக்கு இவ் விழாக்கள் இப்பொழுது ஒத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. சென்னை கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் இவ்விழாவுக்கென விசேஷ அழைப்பின்மீது வருகிறார். வீரகேசரி ஆசிரியர் ஸ்ரீ கே. பி. ஹரன், ஈழகேசரி ஆசிரியர் ஸ்ரீ ராஜ அரியரத்தினம், பல்கலைக் கழகப் பேராசிரியர் ஸ்ரீ அருள்நந்தி, உதவி கல்வி மந்திரி ஸ்ரீ கே. கனகரத்தினம் முதலான பலரும் இவ்விழாக்களில் பங்கு பற்றிச் சொற்பொழிவாற்றுகிறார்கள். இன்னிசைக் கச்சேரிகள் நடத்தவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

## இந்து விக்கிரகங்கள்

திருகோணமலையில் சமீபத்தில் கண்டெடுக்கப்பட்ட புராதன இந்து விக்கிரகங்கள் ஸ்வாமி மலையில் நிரந்தரமாகப் பிரதிஷ்டை செய்யப்படுவதின் முன்னால் தீவு முழுவதும் இப்பொழுது திக்விஜயம் செய்கின்றன. விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட ரதத்தில் இவ் விக்கிரகங்கள் ஊர்வலமாகக் கொண்டு போகப்பட்டு முக்கியமான இந்து ஆலயங்களிலெல்லாம் ஓரிரண்டு தினங்கள் தரிசனத்துக்கு வைக்கப்படுகின்றன. பழந்தமிழ் மன்னர்கள் வழிபட்ட இந்த விக்கிரகங்களைத் தரிசிக்கத் தினசரி பல்லாயிரக் கணக்கிலே சைவ அன்பர்கள் வருகிறார்கள். இந்து சமய மறுமலர்ச்சிக்கே விக்கிரகங்களின் திக்விஜயம் பெரிய தூண்டுதலாக இருந்து வருகின்றது.

—ரஜனி

# புறாத் தம்பதிகளே வருக!

பறந்து பறந்தெங்கும்—திரியும்
பறவை வாழ்வினைப்போல்
சிறந்த வாழ்வேதும்—இந்தச்
செகத்தில் கண்டதுண்டோ?

கனி கனிந்துதரும்—சோலை
கண்டு தங்கிடலாம்
இனிய கீதங்கள்—பாடி
என்றும் வாழ்ந்திடலாம்.

— ஸ்ரீதேசிகவிநாயகம் பிள்ளை.

வருக! வருக!! புறாத் தம்பதிகளே வருக! உங்களை மனப்பூர்வமாக வரவேற்கிறோம்!

நீங்கள் வந்தால் எப்பொழுதும் சமாதானச் செய்தி கொண்டு வருவீர்கள் என்ற ஐதிகம் நிலவுகிறது. அதன்படி இப்பொழுது நீங்களும் ஏதாகிலும் சமாதானச் செய்தி கொண்டு வந்திருக்கிறீர்களா! ஆந்திர மாகாணப் பிரிவினை சமாதான முறையில் ஏற்படும் சுப சூசகம் தெரிவிக்க வந்திருக்கிறீர்களா! அல்லது தமிழ் நாட்டில் நடக்க விருக்கும் தேர்தலில் சண்டை பூசல், மனத் தாங்கலின்றி தக்க மேலோர்கள் தேர்ந்தெடுக்கப் படுவார்கள் என்ற சுபச் செய்தியைச் சொல்ல வந்திருக்கிறீர்களா! எது, எப்படியாயினும் நீங்கள் இந்த இதழ் அட்டையில் வந்தது பற்றிப் பெருமகிழ்ச்சி. ஆகவே, வருக!




அத்தியாயம் 32

## கிள்ளி வளவன் யானை

கூத்து முடிவதற்கும் சமையல் ஆவதற்கும் சரியாயிருந்தது. கட்டுக் கட்டாகத் தாமரை இலைகளைக் கொண்டு வந்து அவ்வீரர்களின் முன்னால் போட்டார்கள். பிறகு பொங்கலும் கறியமுதும் கொண்டுவந்து பரிமாறினார்கள்.

வீரர்கள் சாப்பிடத் தொடங்கிய பிறகு இளவரசர் அவர்களிடையே பந்தி விசாரணை செய்து கொண்டு வலம் வந்தார். அங்கங்கே நின்று அவ்வீரர்களின் உடல் நலத்தைப் பற்றி விசாரித்தார். அவர்களுடைய ஊரையும், பெயரையும் விசாரித்தார். அப்படி விசாரிக்கப்பட்டவர்கள் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார்கள். பக்கத்திலிருந்தவர்கள் அவர்களுடைய அதிர்ஷ்டத்தைப் பாராட்டினார்கள்.

ஏற்கெனவே சோழ நாட்டு வீரர்களுக்கெல்லாம் இளங்கோவின் பேரில் மிக்க அபிமானம் இருந்தது. சமீபத்தில் அந்த அபிமானம் பன்மடங்கு பெருகியிருந்தது. தாய் நாட்டிலிருந்து தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தருவிப்பதற்கு இளவரசர் பெரும் பிரயத்தனம் செய்ததை அவர்கள் அறிந்திருந்தார்கள். அத்துடன் சாதாரணப் போர் வீரர்களுடனே இளவரசர் சமநிலையில் கலந்து பழகி க்ஷேமம் விசாரித்து அவர்களுக்கு உற்சாகத்தை அளித்து வந்தார். இந்த குணாதிசயம் இளவரசரை அவ்வீரர்கள் தங்கள் கண்ணுக்குக் கண்ணாகக் கருதுமாறு செய்திருந்தது.

ஆகையால், வீரர்கள் அங்கங்கே இளவரசரை நிறுத்த முயன்றார்கள். துணிச்சலை வருவித்துக் கொண்டு அவரை ஏதேனும் கேள்வி கேட்பார்கள். முக்கியமாக, அவர்களில் பலரும் கேட்ட கேள்வி, "புலத்திய நகரத்தின் மீது படையெடுப்பு எப்போது?" என்பதுதான். இந்தக் கேள்விக்கு விடையாக இளவரசர் "புலத்திய நகரின்மீது படை எடுத்து என்ன பயன்? மகிந்தன் ரோஹணத்துக் கல்லவா போயிருக்கிறான்?" என்று சிலருக்குச் சொன்னார். "கொஞ்சம் பொறுத்திருங்கள்; மழை காலம் போகட்டும்" என்று வேறு சிலரிடம் சொன்னார். யுத்தமின்றிச் சோம்பி இருப்பதில் சில வீரர்கள் தங்கள் அதிருப்தியை வெளியிட்டுக் கொண்டார்கள். வேறு சிலர் "தாங்கள் மாதமொரு முறையாவது இவ்விதம் வந்து எங்களைப் பார்த்துவிட்டுப் போனால் பொறுமையாயிருக்கிறோம்" என்றார்கள்.

பந்தி விசாரணை முடிந்ததும் இளவரசர் சற்று ஒதுப்புறமாக அவருக்கென அமைத்திருந்த படை வீட்டுக்குச் சென்றார். வந்தியத்தேவனையும் ஆழ்வார்க்கடியானையும் அவர் தம்முடன் அழைத்துக் கொண்டு போனார்.

"இந்த வீரர்களின் உற்சாகத்தைப் பார்த்தீர்கள் அல்லவா? தஞ்சையிலிருந்து மட்டும் தகுந்த ஒத்துழைப்புக் கிடைத்திருந்தால் இதற்குள் இந்த இலங்கைத்தீவு முழுவதும் நம் வசமாகியிருக்கும். அருமையான சந்தர்ப்பம் வீணாகிப் போய் விட்டது. இங்கே மழை காலத்தில் யுத்தம் நடத்த முடியாது. இன்னும் மூன்று நாலு மாதம் நம் வீரர்கள் சும்மா இருக்க வேண்டியதுதான்!" என்று சொன்னார்.

இதைக் கேட்ட திருமலை, "இளவரசே! தாங்கள் இதைப் பற்றிக் கவலைப்படுவது

வியப்பா யிருக்கிறது. அங்கேயோ சோழ ம்ராஜ்யத்துக்கே பேரபாயம் நேர்ந் ருக்கிறது! விஜயாலய சோழர் ஸ்தாபித்த ராஜ்யம், பராந்தகராலும் சுந்தர சோழராலும் பல்கிப் பெருகிய மகாராஜ்யம், உள் அபாயங்களினால் சின்ன பின்னமாகி விடும் போலிருக் கிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஆம், ஆம்! நீங்கள் இருவரும் முக்கியமான செய்தி கொண்டு வந்திருக் கிறீர்கள். நான் என்னுடைய அற்பக் கவலையை வெளியிட்டுக் கொண்டிருக் கிறேன். நல்லது; இப்போது நீங்கள் சொல்ல வேண்டியதை யெல்லாம் விவர மாகச் சொல்லுங்கள். முதலில் இவர் ஆரம்பிக்கட்டும்!" என்று இளவரசர் வந்தியத்தேவனைச் சுட்டிக் காட்டினார்.

வந்தியத்தேவன் உடனே தன் கதை யைத் தொடங்கினான். காஞ்சியிலிருந்து தான் புறப்பட்டது முதல் கண்டவை, கேட்டவை எல்லாவற்றையும் கூறினான். பற்பல அபாயங்களிலிருந்து தப்புவதற் குத் தான் புரிந்த சாகஸச் செயல்களைக் குறித்து அதிகமாக விஸ்தரிக்க விரும் பாதவன் போல் காட்டிக் கொண்டு, அதே சமயத்தில் தன் பிரதாபங்களை வெளியிட்டான். கடைசியில், "ஐயா! தங்கள் அருமைத் தந்தையாரைச் சிறை யில் வைத்திருப்பது போல் வைத்திருக் கிறார்கள். நெருங்கிய பந்துக்களும் பெருந்தர அதிகாரிகளும் சிற்றரசர்களும் சேர்ந்து பயங்கரமான சதி செய்கிறார்கள். இதனாலெல்லாம் தங்கள் சகோதரி இளையபிராட்டி பெருங் கவலையில் ஆழ்ந் திருக்கிறார். ஆகையால் தாங்கள் உடனே புறப்பட்டு என்னுடன் பழையாறைக்கு வரவேண்டும். ஒரு கணமும் தாமதிக்கக் கூடாது!" என்று முடித்தான்.

பிறகு ஆழ்வார்க்கடியான் தனது வர லாற்றைக் கூறினான். வந்தியத்தேவன் கூறியவற்றையெல்லாம் அவனும் ஆமோ தித்தான். அத்துடன் திருப்புறம்பயம் பள்ளிப்படை யருகில் நள்ளிரவில் நடந்த கொலைகாரர்களின் சதியைப் பற்றியும் கூறினான். சோழ நாட்டு நிலைமை இவ் வளவு அபாயகர மாயிருப்பதால் தற் சமயம் இளவரசர் அங்கு வராமலிருப் பதே நல்லது என்று முதன் மந்திரி அநிருத்தர் சொல்லி அனுப்பிய செய்தியை மறுபடியும் வற்புறுத்திக் கூறினான்.

"தாங்கள் சோழ நாட்டுக்குத் தற் சமயம் வராமலிருப்பது மட்டுமல்ல; இங் கேயும் படையெடுப்பை மேலும் விஸ்த ரித்துக் கொண்டு போக வேண்டாம் என்று முதன் மந்திரி கேட்டுக் கொள் கிறார். படைகளை யெல்லாம் திரட்டி வட இலங்கையில் சேர்த்து வைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள் கிறார். சதி காரர்கள் சீக்கிரத்தில் வெளிப்பட்டு வந்து தங்கள் உண்மை சொரூபத்தைக் காட்டுவார்கள். அச் சமயம் இப்போது இலங்கையிலுள்ள படை மிக்க உபயோகமாயிருக்கும் என்று முதன் மந்திரி அபிப்பிராயப் படுகிறார். பாண்டிய நாட்டில் தற்சமயம் உள்ள கைக் கோளர் படை, வன்னியர் படை, வேளாளர் படை—மூன்றும் இளவரச ருக்காக உடல் பொருள் ஆவியை அர்ப்பணம் செய்யக் காத்திருக்கின்றன. இதையும் தங்களுக்குத் தெரிவிக்கும்படி முதன் மந்திரி எனக்குக் கட்டளையிட் டார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"திருமலை! உன் குருநாதர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்? பாடலி புரத்துச் சாணக்கியரைப் போல் இவர் அன்பில் சாணக்கியர் என்று தன்னை எண்ணிக் கொண்டிருக்கிறாரா? என் உற்றார் உறவினரோடு நான் சண்டை போட வேண்டும் என்கிறாரா?" என்று இளவரசர் ஆத்திரமாய்க் கேட்டார்.

"இல்லை, ஐயா! அநிருத்தர் அவ்விதம் சொல்லவில்லை. ஆனால் சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதி செய்கிறவர்களை,— சாம்ராஜ்யத்துக்குத் துரோகம் செய்ய முயற்சி தொடங்கி யிருப்பவர்களை,— சமயம் பார்த்துத் தண்டிக்க வேண்டும் என்கிறார். அதற்கு உதவி புரிவது தங்கள் கடமை அல்லவா?" என்றான் திருமலை.

"அதற்கு நான் எப்படி அதிகாரி யாவேன்? சதி நடப்பது உண்மையா னால் அதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டியது சக்கரவர்த்தியல்லவா? என் தந்தையின் கட்டளையின்றி நான் எப்படி இந்தக் காரியத்தில் பிரவேசிக்க முடி யும்!" என்றார் இளவரசர்.

வந்தியத்தேவன் இப்போது குறுக் கிட்டு, "இளவரசே! தங்கள் தந்தை இப்போது சுயாதீனமா யில்லை. பழு வேட்டரையர்கள் அவரைச் சிறை வைத் திருப்பது போல் வைத்திருக்கிறார்கள். யாரும் நெருங்க முடியாதபடி அரண் மனைக் குள்ளே வைத்திருக்கிறார்கள். தங்கள் தமையனாரோ தஞ்சைக்கு வரு வதில்லை யென்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலைமையில் சாம்ராஜ்யத்தைப் பாதுகாப்பது தங்கள்

பொறுப்பல்லவா? உடனே பழையாறைக்கு வரவேண்டியது தங்கள் கடமை அல்லவா?'' என்ருன்.

"இளவரசர் பழையாறைக்கு வர வேண்டிய அவசியம் என்ன? அதுதான் எனக்குத் தெரியவில்லை!'' என்ருன் ஆழ்வார்க்கடியான்.

இளவரசர் சற்று சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "மண்ணாசை மிகப் பொல்லாதது. இராஜ்யத்தின் பேரில் உள்ள ஆசையினுல் இவ்வுலகில் என்னென்ன பயங்கரமான பாவங்கள் நடந்திருக்கின்றன? இன்று சிம்மகிரிக் கோட்டைக்குப் போயிருந்தேனல்லவா? அந்தக் கோட்டையின் வரலாறு உங்களுக்குத் தெரியுமா?'' என்ருர்.

"நான் கேட்டதில்லை'' என்ருன் வந்தியத்தேவன்.

"சொல்கிறேன், கேளுங்கள்! சுமார் ஐந்நூறு வருஷங்களுக்கு முன்பு இந்த இலங்கைத் தீவைத் தாதுசேனன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். ஒருவன் பெயர் காசியபன்; இன்னொருவன் மகல்லன். தாதுசேனனின் சேனுபதியும் காசியபனும் சேர்ந்து சதியாலோசனை செய்தார்கள். காசியபன் தன் சொந்தத் தந்தையைச் சிறையில்



அடைத்து விட்டுச் சிங்காதனம் ஏறினான். மகல்லன் கடல் கடந்து தமிழ்நாட்டுக்கு ஓடிப் போனான். சில நாளைக்குப் பிறகு தாதுசேனனின் சிறையைச் சுற்றிச் சுவர் எழுப்பி அடைத்து அவனைக் கொன்று விட்டார்கள். இந்தக் கொடூர பாவத்தைச் செய்த காசியபனுக்குத் தன் சகோதரன் மகல்லன் திரும்பி வந்து பழிக்குப் பழி வாங்குவான் என்ற பீதி உண்டாகி விட்டது. அதற்காக இந்த ஸிம்மகிரிக் குன்றுக்கு வந்தான். இதன் உச்சியில் கோட்டை கட்டிக் கொண்டு வசித்து வந்தான். செங்குத்தான குன்றாகையால் பகைவர்கள் அதன் பேரில் ஏறிக் கோட்டையைப் பிடிப்பது இயலாத காரியம் என்று நினைத்தான். இம்மாதிரி பதினெட்டு வருஷம் ஒளிந்து வாழ்ந்திருந்தான். கடைசியில் ஒரு நாள் மகல்லன் தன் உதவிக்குப் பாண்டிய ராஜாவின் சைன்யத்தையும் அழைத்துக் கொண்டுவந்து சேர்ந்தான். ஸிம்மகிரிக் கோட்டையை அணுகினான். அச்சமயத்தில் காசியபனின் புத்தி பேதலித்து விட்டது. அத்தனை வருஷம் கோட்டையில் ஒளிந்திருந்தவன் அசட்டுத் தைரியத்துடன் வெளிவந்து போராடி இறந்தான்! அப்பேர்ப்பட்ட பாதகன்,—தந்தையைக் கொன்ற பாவி,—கட்டிய கோட்டையில் சில அற்புதமான வர்ண சித்திரங்கள் இருக்கின்றன. இன்று சீன யாத்திரீகர்களுடன் போயிருந்தபோது பார்த்தேன். அடடா! அந்தச் சித்திரங்களின் அழகை என்னவென்று சொல்வது? பல நூறு வருஷங்களுக்கு முன்பு எழுதியவை. ஆனால் இன்றைக்கும் சிறிதும் வர்ணம் மங்காமல் புத்தப் புதிய சித்திரங்கள் போல் இருக்கின்றன......"




"ஐயா! நான் ஒரு கேள்வி கேட்கலாமா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"தயக்கம் ஏன்? தாராளமாய்க் கேட்கலாம்."

"ஸிம்மகிரிக் கோட்டை இன்

னும் பகைவர் படைகளின் வசத்திலே தானே இருக்கிறது?"

"ஆமாம்; அதைக் கைப்பற்றும் முயற்சியை இப்போது தொடங்கும் உத்தேசம் எனக்கு இல்லை. அதனால் வீணான உயிர்ச் சேதம் ஏற்படும்."

"அதைப்பற்றி நான் கேட்கவில்லை, ஐயா! பகைவர் கோட்டைக்குள் தாங்கள் பிரவேசித்தது உசிதமா என்று கேட்டேன். சில யாத்திரிகர்களுக்கு யானைப் பாகனாகத் தாங்கள் போகவேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது? யானையின் கழுத்தில் தங்களைப் பார்த்ததும் என் கண்களை நம்புவதா இல்லையா என்ற சந்தேகம் எனக்கு ஏற்பட்டு விட்டது. தங்களுடைய புருவத்தின் நெரிப்பைப் பார்த்துத்தான் சந்தேகம் தெளிந்து நிச்சயப்படுத்திக் கொண்டேன். இப்படித் தங்கள் உயிருக்கு அபாயத்தை ஏற்படுத்திக் கொள்ளலாமா?"

"என் உயிர் மட்டும் அவ்வளவு உயர்ந்ததா, திருமலை! எத்தனை சோழ நாட்டு வீரர்கள் இந்த இலங்கையில் வந்து உயிரை விட்டிருக்கிறார்கள்?..."

"அவர்கள் போர்க்களத்தில் உயிர் துறந்தார்கள். தாங்கள் அநாவசியமாகத் தங்களை அபாயத்துக்கு உள்ளாக்கிக் கொண்டீர்கள்!"

"அநாவசியமில்லை; இரண்டு காரணங்கள் உண்டு. ஸிம்மகிரி சித்திரங்களைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எனக்கு வெகு நாளாக இருந்தது. அந்த ஆசையை இன்று பூர்த்தி செய்து கொண்டேன்......"

"இளவரசே! இன்னொரு காரணம்?"

"பார்த்திப பல்லவர் திரிகோண மலையில் வந்து இறங்கினவுடனே, எனக்குச் செய்தி கிடைத்தது. அவரை இன்று பார்க்க விரும்பவில்லை ஏனெனில்......"

"ஏனெனில்?......"

"மாதோட்டத்துக்கு முதன் மந்திரி வந்திருக்கிறார் என்பதும் எனக்குத் தெரியும். அவரிடமிருந்து செய்திவரும் என்று எதிர்பார்த்தேன். இரண்டு மூத்தவர்களிடமிருந்து செய்தி வந்தால், முதலில் கிடைக்கிற செய்தியின்படிதானே நான் நடந்தாக வேண்டும்?"

வந்தியத்தேவன் "ஆகா! அப்படிச் சொல்லுங்கள். என் கட்சிதானே ஜயித்தது?" என்று குதூகலித்தான்.

"அரசே! இவன் தங்களைத் தந்திரத்தினால் ஏமாற்றி விட்டான்......"

"அவன் ஏமாற்றவில்லை. நானாகவே ஏமாந்தேன். உன்னை அழைத்து வருவதற்கு வைத்திருந்த வீரனை இவன் குதிரை மேலிருந்து தள்ளிவிட்டு அக்குதிரை மீது தான் ஏறிக்கொண்டு வந்ததை நான் கவனித்து விட்டேன். இவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பினேன்......"

"நல்ல பாடம் கற்பித்தீர்கள்! ஒவ்வொரு பாடமும் ஒரு மணங்கு நிறையிருக்கும். இப்போது நினைத்தாலும் என் முதுகும் மார்பும் வலிக்கின்றன! ஓலை கொண்டு வந்த தூதனை இப்படித்தானா நடத்துவது? போனால் போகட்டும்; தாங்கள் மட்டும் என்னுடன் பழையாறைக்கு வருவதாயிருந்தால்..."

"எனக்கு ஒரு பழைய பாடல் ஞாபகம் வருகிறது! திருமலை! என் முன்னோர்களில் பெருங்கிள்ளி வளவன் என்று ஒரு மன்னர் இருந்தார். அவரிடம் ஓர் அதிசயமான யானை இருந்தது. அதன் ஒரு கால் காஞ்சியில் இருக்கும்; இன்னொரு காலினால் தஞ்சையை மிதிக்கும்; மற்றொரு கால் இந்த ஈழ நாட்டை மிதிக்கும். நாலாவது கால் உறையூரில் ஊன்றி நிலைத்திருக்கும்.

'கச்சி ஒரு கால் மிதியா, ஒரு காலால்
தத்துநீர்த் தண்தஞ்சை தான்மிதியாப்
—பிற்றையும்
ஈழம் ஒரு கால் மிதியா வருமே நம்
கோழியர் கோக் கிள்ளி களிறு!'

என்று அற்புதமான கற்பனையுடன் ஒரு புலவர் பாடியிருக்கிறார். இந்த இலங்கையில் மந்தை மந்தையாக ஆயிரம் ஆயிரம் யானைகள் இருக்கின்றன. இருந்து என்ன பயன்? புலவருடைய கற்பனை யானையைப் போல் ஒரு யானை இருந்தால் நானும் ஒரே சமயத்தில் காஞ்சியிலும் பழையாறையிலும் மதுரையிலும் இலங்கையிலும் இருக்கலாம் அல்லவா?"

புலவரின் யானையைப் பற்றிக் கேட்டதும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

"அப்படிப்பட்ட யானைதான் இல்லையே? தாங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று திருமலை கேட்டான்.

"சந்தேகம் என்ன? பழையாறைக்கு வருவதென்றுதான் முடிவாகிவிட்டதே?" என்றான் வந்தியத்தேவன்.

"உங்கள் சண்டையைக் கொஞ்சம் நிறுத்தி வையுங்கள். நாளை அநுராதபுரம் போவோம். அங்கே பார்த்திப பல்லவரை நான் எப்படியும் சந்தித்தாக வேண்டும். அவர் சொல்வதையும் கேட்டு விட்டுத்தான் முடிவு செய்ய வேண்டும்" என்றார் இளவரசர்.

## அத்தியாயம் 33

# சிலை சொன்ன செய்தி

மறுநாள் காலையில் சூரியன் உதய மாவதற்குள் அருள்மொழி வர்மர், ஆழ்வார்க்கடியான், வந்தியத்தேவன் ஆகிய மூவரும் அநுராதபுரத்துக்குப் புறப்பட்டார்கள். சிறிது தூரம் காட்டுப் பாதையில் வந்த பிறகு இராஜ பாட்டையை அடைந்தார்கள். வேறு வீரர்கள் யாரையும் இளவரசர் தம்முடன் மெய்காவலுக்கு அழைத்து வராதது வந்தியத்தேவனுக்கு வியப்பை அளித்தது. ஆனால் அன்றையப் பிரயாணத்தில் அவனுக்கிருந்த உற்சாகத்தைப் போல் அதற்கு முன் என்றுமிருந்ததில்லை. காலை நேரத்தில் இருபுறமும் மரங்களடர்ந்த அந்த இராஜ பாட்டையில் பிரயாணம் செய்வதே ஓர் ஆனந்த அநுபவம். பழையாறை அரசிளங் குமரி தன்னிடம் ஒப்புவித்திருந்த வேலையைச் செய்து முடித்து விட்டோம் என்ற பெருமித உணர்ச்சி அவன் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்தது. அது மட்டுமா? பல வருஷங்களாக அவன் இருதயத்தில் பொங்கிக் கொண்டிருந்த ஆசையும் நிறைவேறிவிட்டது. சோழவள நாட்டின் செல்லப் பிள்ளையைப் பார்த்தாகிவிட்டது. நாடு நகர மெல்லாம் மக்கள் எந்த வீர இளைஞரின் வீரப் பிரதாபங்களையும் குணாதிசயங்களையும் பாடிப் புகழ்ந்து கொண்டிருந்தார்களோ, — அந்த அரசிளங் குமரரைச் சந்தித்தாகிவிட்டது. அந்தச் சந்திப்புதான் எவ்வளவு அதிசயமான சந்திப்பு?—அருள்மொழி வர்மர் ஒரு விசித்திரமான மனிதர் என்று தான் கேள்விப் பட்டிருந்தது உண்மைதான்! திடீரென்று குதிரையைத் திருப்பித் தன்னைத் தாக்கித் திக்குமுக்காடச் செய்து விட்டாரே? அவர் சேனைக்குத் தலைமை வகித்துச் செல்லுமிடங்களி லெல்லாம் வெற்றி மேல் வெற்றியாக இருந்து வருவதின் இரகசியமும் இதுதான் போலும்! பகைவர்கள் எதிர்பாராத சமயத்தில் எதிர்பாராத இடத்தில் தாக்குவதே இவருடைய போர் முறை போலும்! ஆனால் இவரது இடைவிடா வெற்றியின் இரகசியம் இதுமட்டுந் தானா? சேனா வீரர்களுடன் எவ்வளவு பவ்யமாக இவர் பழகுகிறார்? எப்படி அவர்களைத் தம் அன்புக்கு வசப்படுத்தி வைத்திருக்கிறார்!

போர் வீரர்களை மட்டுந்தானா? தாம் வெற்றிகொண்ட நாட்டின் மக்களையும் எப்படி வசீகரப்படுத்தி வைத்திருக்கிறார்? சமீபத்தில் மாபெரும் போர் நடந்த நாடு என்று இதைச் சொல்ல முடியுமா? சாலைகளில் மக்கள் எவ்வளவு உல்லாசமாக நடந்து கொண்டிருக்கிறார்கள்! இரு பக்கங்களிலுமுள்ள கிராமங்களில் ஜனங்கள் எப்படி நிர்ப்பயமாகவும் கவலையின்றியும் தத்தம் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள்? மக்களின் முகங்களில் பீதியின் அறிகுறியோ துயரத்தின் சின்னமோ சிறிதும் காணப்படவில்லையே? கலகலவென்று பெண்களும் குழந்தைகளும் சிரிக்கும் சத்தம்கூட அடிக்கடி காதில் விழுகிறதே! இது என்ன விந்தை! இவர் எத்தகைய விந்தையான மனிதர்!—வெற்றிகொண்ட நாட்டு மக்களிடமிருந்து உணவுப் பொருளைக் கைப்பற்றக்கூடாது என்று இளவரசர் பிடிவாதம் பிடித்துச் சோழ நாட்டிலிருந்து சைன்யத்துக்கு உணவுப் பொருள் வர வேண்டுமென்று வற்புறுத்தியதும், அதன் காரணமாகப் பழுவேட்டரையர்களுக்கு ஏற்பட்ட கோபமும், அவர்கள் சுந்தர சோழரிடம் புகார் கூறியதும்,— இவையெல்லாம் வந்தியத் தேவனுக்கு நினைவு வந்தன. அன்றியும், ஆதித்த கரிகாலர் கையாளும் கொடூரமான போர் முறையையும் அருள்மொழி வர்மரின் தயாளம் பொருந்திய தர்ம யுத்த முறையையும் அவன் தன் மனதிற்குள்ளே ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டான். சில நாளைக்கு முன்பு வரையில் தன்னுடைய எஜமானரா யிருந்த ஆதித்த கரிகாலரைப் பற்றி எவ்விதத்திலும் குறைவாக எண்ணுவது அவனுக்கே பிடிக்கவில்லை. ஆயினும் அந்த அநுராதபுரத்து இராஜ பாட்டையில் இருபுறமும் வசித்த கிராம ஜனங்களின் மலர்ந்த முகங்களைப் பார்க்கும்போதெல்லாம் அவன் மேற்கண்டவாறு ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அம்மம்மா! ஆதித்த கரிகாலர் யுத்தம் செய்து திரும்பிய நாடுகளில் இத்தகைய காட்சிகளைக் காண முடியுமா? எங்கெங்கும் ஓரே ஓலக்குரல் அல்லவா கேட்டுக் கொண்டிருக்கும்?

இத்தகைய அபூர்வ குணாதிசயம் படைத்த இளவரசருடன் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும், எவ்வளவோ காரியங்களைப் பற்றிக்

கேட்க வேண்டும் என்று வந்தியத் தேவனுடைய உள்ளம் துடிதுடித்தது. ஆனால் புரவிகளின் பேரில் ஆரோகணித்து விரைவாகச் சென்று கொண்டிருக்கும் சமயத்தில் பேசுவதற்கு இடம் எங்கே?— ஆம், பேசுவதற்கு ஒரே ஒரு சந்தர்ப்பம் மட்டும் அவனுக்குக் கிடைத்தது.

அநுராதபுரத்துக்குக் கிட்டத்தட்டப் போய்க் கொண்டிருந்தபோது சாலை ஓரத்தில் பெரியதொரு புத்த பகவானின் சிலை நிற்பதை வந்தியத்தேவன் கண்டான். இம்மாதிரி சிலைகள் இலங்கையில் பற்பல இடங்களிலும் இருந்தபடியால் அதைப்பற்றி வந்தியத்தேவன் அதிக கவனம் செலுத்தவில்லை. ஆனால் பொன்னியின் செல்வர் அச்சிலையின் அருகில் குதிரையைச் சடேரென்று இழுத்துப் பிடித்து நிறுத்தியதும் இவனும் நிற்க வேண்டியதாயிற்று. சற்று முன்னாலேயே போய்க் கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானும் குதிரையை நிறுத்தி இவர்கள் பக்கம் திரும்பினான்!

பொன்னியின் செல்வர் சற்று நேரம் அந்த புத்த பகவானுடைய கம்பீரமான சிலையைக் கவனமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"அடடா! என்ன அற்புதக் கலை!" என்றார்.

"எனக்கு ஒரு அற்புதமும் தெரியவில்லை. இந்த நாட்டில் எங்கே பார்த்தாலும் இத்தகைய பிரம்மாண்டமான புத்தர் சிலைகளை வைத்திருக்கிறார்கள். எதற்காகவோ தெரியவில்லை!" என்றான் வந்தியத் தேவன்.

இளவரசர் வந்தியத் தேவனைப் பார்த்துப் புன்னகை செய்தார். "மனதில் உள்ளதை உள்ளபடி பேசுகிறீர். அதில் எனக்கு மகிழ்ச்சி!" என்றார்.

"இளவரசே! வல்லவரையர் இன்றைக்குத்தான் உண்மை பேசுவதென்கிற வழக்கத்தைக் கைக் கொண்டிருக்கிறார்!" என்றான் திருமலை.

"வைஷ்ணவரே! எல்லாம் சகவாச தோஷந்தான்! வீர நாராயணபுரத்தில் உம்மைப் பார்த்ததுமுதல் என் நாவில் கற்பனா சக்தி தாண்டவமாடி வந்தது. இளவரசரைப் பார்த்ததிலிருந்து உண்மை பேசும் வழக்கம் வந்து விட்டது!" என்றான் வந்தியத்தேவன்.

அவர்களுடைய சொற்போரை இளவரசர் கவனிக்கவில்லை. சிலையின் தோற்றத்தில் ஆழ்ந்திருந்தார்.

"உலகத்திலேயே சிற்பக் கலையின் அற்புதம் பூரணமாக விளங்கும் வடிவங்கள் இரண்டுதான். ஒன்று நடராஜர்; இன்னொன்று புத்தர்" என்றார்.

"ஆனால் நடராஜ வடிவங்களை இம்மாதிரி பிரம்மாண்ட வடிவங்களாக நம் நாட்டில் செய்வதில்லையே?"

"இலங்கையில் முற்காலத்தில் இருந்த மன்னர்களில் சிலர் மகா புருஷர்கள். அவர்கள் ஆண்ட ராஜ்யம் சிறியது. ஆனால் அவர்களுடைய இருதயம் பெரியது; அவர்களுடைய பக்தி மிகப் பெரியது. புத்தபகவானிடம் அவர்களுடைய பக்தியை இப்படிப் பெரிய வடிவங்களை அமைத்துக் காட்டினார்கள். புத்த சமயத்தில் அவர்களுடைய பக்தியைப் பெரிய பெரிய ஸ்தூபங்களை அமைத்துக் காட்டினார்கள். இந்த நாட்டில் உள்ள புத்தர் சிலைகளையும் விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் பார்த்து விட்டு நம் சோழ நாட்டிலுள்ள சின்னஞ்சிறு சிவன் கோவில்களை நினைத்தால் எனக்கு அவமானமாயிருக்கிறது!" என்றார் பொன்னியின் செல்வர்.

இவ்விதம் சொல்லி விட்டுக் குதிரையிலிருந்து இறங்கி இளவரசர் புத்தர் சிலையண்டை சென்றார். சிலையின் பத்ம பாதங்களையும் அந்தப் பாதங்களை அலங்கரித்த தாமரை மொட்டுக்களையும் சிறிது நேரம் கவனமாகப் பார்த்தார். பின்னர் புத்தர் சிலையின் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டு விட்டுத் திரும்பி வந்து பழையபடி குதிரையின் மீது ஏறினார்.

குதிரைகள் சற்று மெதுவாகவே சென்றன. "ஏதேது? இளவரசர் புத்த மதத்தைச் சேர்ந்து விடுவார் போலிருக்கிறதே!" என்று வந்தியத்தேவன் திருமலையிடம் சொன்னது இளவரசர் காதில் விழுந்தது.

அவர்கள் இருவரையும் பொன்னியின் செல்வர் பார்த்து, "புத்த பகவானிடம் என்னுடைய பக்தி காரணார்த்தமானது. அந்தப் புத்தர் சிலையின் பத்ம பாதங்கள் எனக்கு ஒரு முக்கியமான செய்தியை அறிவித்தன!" என்றார்.

"ஆகா! எங்கள் காதில் ஒன்றும் விழவில்லையே?"

"மௌன பாஷையில் அச்செய்தி எனக்குக் கிடைத்தது."

"அது என்ன செய்தி? எங்களுக்குத் தெரியலாமா?"

"இன்றிரவு பன்னிரண்டு நாழிகைக்கு அநுராதபுரத்தில் சிம்ம தாரைத் தடாகத்துக்கு அருகில் நான் வரவேண்டுமென்று பகவானுடைய பாதமலர்கள் எனக்கு அறிவித்தன!" என்றார் பொன்னியின் செல்வர். (தொடரும்)

# பார்வையும் ஏழ்மையும்

**வி. எஸ். ஆர்.**

“அக்கா! இது என்ன அவதூறு! நீ சொல்வதை நான் ஒருநாளும் நம்ப மாட்டேன்” என்றான் ஜம்புநாதன்.

“நம்பினால் நம்பு. நம்பா விட்டால் போ! கொஞ்ச நாள் போனால் உனக்கே எல்லாம் தெரியப் போகிறது. நீலா வாங்கியிருக்கும் அரக்குக் கலர் புடவை ஒருநாளும் முப்பது ரூபாய்க்கு மேல் இருக்காது” என்றாள் ஜம்புநாதனின் மூத்த சகோதரியான கனகம்.

“தெரியும் அக்கா! நீ சொல்லப் போவது என்ன என்பது எனக்குத் தெரியும். நீலா என்னிடம் ஐம்பது ரூபாய் வாங்கி, முப்பது ரூபாய் புடவைக்காரனுக்குக் கொடுத்து விட்டு, இருபது ரூபாயைப் பிறந்தகத்துக்குக் கொடுத்து அனுப்பி விட்டாள் என்றுதானே சொல்லுகிறாய்!” என்று கூறிச் சிரித்தான் ஜம்புநாதன்.

கனகத்தின் கண்களில் கோபம் ஜ்வலித்தது. “ஆமாம். இப்பொழுது நான் சொல்வது உனக்குக் கேலியாகத்தானிருக்கும். புதுப் பெண்டாட்டி மோகத்தில் உனக்கு நான் எது சொன்னாலும் உன் காதில் விழாதுதான்!”

“அப்படியே வைத்துக்கொள்! நீலா எவ்வளவு பணம் கேட்டாலும் என் கையில் இருந்தால் அவள் பிறந்தகத்தாருக்குக் கொடுக்க நான் தயார். அப்படியிருக்கும்போது அவள் ஏன் முப்பது ரூபாய்ப் புடவையை ஐம்பது ரூபாய் என்று என்னிடம் பொய் சொல்ல வேண்டும்!”

“இது கூடத் தெரியவில்லையா! நான் ஒருவேளை அவள் பிறந்தகத்துக்குப் பணம் கொடுக்கக் கூடாது என்று குறுக்கே நின்றால் என்ன செய்வது என்றுதான்.”

“என்ன இருந்தாலும் நீலா அப்படிப் பொய் சொல்லக்கூடியவள் என்று நான் நினைக்கவில்லை” என்று அழுத்தமாகச் சொன்னான் ஜம்புநாதன்.

இந்தச் சமயத்தில், வாசலில் குழாயடியில் ஜலம் எடுக்கச் சென்றிருந்த நீலா உள்ளே வரும் சத்தம் கேட்கவே, கனகம் ஆத்திரமும் அவமானமும் முகத்தில் பிரதிபலிக்கத் தம்பியை ஒரு பார்வை பார்த்துவிட்டு உள்ளே போய் விட்டாள்.

* * *

ஜம்புநாதனுக்குக் கல்யாணமாகி, நீலா புக்ககம் வந்து ஆறு மாதங்கள் இருக்கும். சில வருஷங்களுக்கு முன் தாய் தந்தையை இழந்த ஜம்புநாதன் அக்கா கனகம்மாள் வீட்டிற்கு வந்து சேர்ந்தான். இதன் பிறகுதான், அவர்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுப் பெண்ணான நீலாவை அவன் சந்தித்தது. அன்று காலை பக்கத்து வீட்டு வாசலில் விதம் விதமான மாக்கோலம் போட்டுக் கொண்டிருந்த அழகி நீலாவை முதன் முதலில் பார்த்ததுமே அவன் உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டான். அந்த நிமிஷத்திலிருந்தே அவன் மனத்தில் நீலா குடிபுகுந்தாள்.

அடுத்த வீட்டுப் பெண்ணைப்பற்றி அக்காவிடம் அவ்வப்பொழுது விசாரித்து விவரங்களைத் தெரிந்துகொண்டான் ஜம்பு. ரிடயரான ஆரம்ப பாடசாலை ஆசிரியரின் மூத்த பெண் நீலா. சிறிதும் பெரிதுமாக ஏகப்பட்ட குழந்தைகள் அவர்கள் வீட்டில் இருந்தன. நீலாவைக் கல்யாணம் செய்து கொடுக்க அவள் தகப்பனார் எவ்வளவோ முயற்சி செய்தும் பொருளாதார நிலைமை காரணமாக முடியாமல் இருந்தது.

ஜம்புநாதன் பக்கத்து வீட்டுக்கு வந்ததிலிருந்து நீலாவின் போக்கிலும் குறிப்பிடத்தக்க மாறுதல் காணப்பட்டது. ‘வயதான பெண் வெளியில் போகக் கூடாது’ என்று அவள் தாயார் இட்டிருந்த கட்டளையையும் மீறிக் குடத்தை எடுத்துக் கொண்டு வாசற் குழாயில் ஜலம் பிடிக்க வந்து விடுவாள். வாசல் திண்ணையில் அவள் வருகையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பான் ஜம்புநாதன். குடத்தில் ஜலம் நிரம்புவதற்குள்ளேயே, அவள் அழகைப் பருகிய அவன் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பிவிடும்.

அந்த வருஷம் ஜம்புநாதன் ஸர்வீஸ் கமிஷன் பரீட்சை தேறவே சர்க்கார் காரியாலயம் ஒன்றில் வேலை கிடைத்தது. இதற்குப் பிறகு சம்பவங்கள் வெகு துரிதமாக நடைபெற்றன. ஒரு சுபதினத்தில் ஜம்புநாதனுக்கும் நீலாவுக்கும் கல்யாணமும் இனிது நடந்தேறியது.

புக்ககம் வந்த இளம் மனைவியைப் பார்த்து ஜம்புநாதன் குதூகலமும் பெருமையும் அடைந்தான். நீலாவோ உள்ளமும் உடலும் பூரித்து வனப்பிலும் வசீகரத்திலும் ஒப்பற்று விளங்கினாள். இன்பக் கனவுபோல் நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

நீலா புக்ககம் வந்த புதிதில் கனகம்மாளும் தம்பி மனைவியிடம் பிரியமாகவே இருந்தாள். ஆனால் நாளடைவில் அவள் நீலாவைக் கொஞ்சம் கொஞ்சமாக வெறுக்கத் தலைப்பட்டாள். நீலா அவளை “அக்கா!” “அக்கா!” என்று அன்புடன் கூப்பிட்டுக் கொண்டிருப்பாள். அவளுக்கு உதவியாக வீட்டு வேலைகளில் உத்சாகத்துடன் ஈடுபட்டாள். ஆயினும் கனகத்துக்கு நீலாவிடம் திருப்தி யுண்டாகவில்லை. காரணம் தன் பிறந்தகத்து மனிதர்களைப் பற்றிப் பேசுவதும் பிறந்தகத்து ஏழ்மை நிலையைக் குறித்து நீலா வேதனையடைவதும் கனகத்துக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை.

ஒருநாள் சோப், ரிப்பன் முதலிய சாமான்கள் வாங்குவதற்காக ஜம்புநாதன் நீலாவுக்கு ஐந்து ரூபாய் கொடுத்தான். ஜம்புநாதன் ஆபீஸ் போனதும் கனகம், “நீலா! அந்த ஐந்து ரூபாயை என்னிடம் கொடேன். பின்னால் தந்து விடுகிறேன்!” என்றாள். கனகத்துக்கு எப்பொழுதும் பண முடை. அவள் கணவனுக்குச் சொற்ப சம்பளம். ஜம்புநாதன் மாதம் எண்பது ரூபாய் அக்காள் கையில் கொடுத்துவந்தான். முன்பு ஒரு சமயம் நீலாவிடம் இந்தமாதிரி கனகம் கேட்டு வாங்கிக்கொண்ட பணத்தை இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை. ஆகவே நீலா, “அக்கா! அந்தப் பணத்தைக் காலையில் என் தம்பியிடம் கொடுத்து சோப், பவுடர் இதெல்லாம் வாங்கி வரச் சொல்லி விட்டேனே,” என்று ஒரு பொய் சொல்லி வைத்தாள். அந்த நிமிஷத்தில் அக்காள் மனத்தில் ஒரு தவறான எண்ணம் புகுந்துவிட்டது. அடிக்கடி கணவன் கொடுக்கும் பணத்தைப் பிறந்தகத்துக்கு நீலா கொடுத்து விடுகிறாள் என்றுதான்.

ஜம்புநாதன் இயற்கையில் கண்ணிய குணம் படைத்தவன். தவறான காரியங்களையோ, இழிவான எண்ணங்களையோ மனத்தாலும் நினைக்க

மாட்டான். அவனது உயர்ந்த குணம் கனகத்துக்கு நன்றாகத் தெரியும். "இப்படிப்பட்ட அப்பாவிக்கு இப்படி ஒரு ராக்ஷஸி கிடைத்தாளே!" என்று கனகம் நினைத்தாள்.

முதலில் பட்டும் படாமலும் பிறகு தெளிவாகவும் தன் சந்தேகங்களை ஜம்புநாதனிடம் கூறியபோது அவன் விழுந்து விழுந்து சிரித்தான். "நீலா ஒருநாளும் அப்படிச் செய்ய மாட்டாள். அவள் பொறுப்பில்லாதவள் அல்ல. எனக்குத் துரோகம் செய்பவள் அல்ல!" என்று அவன் தீர்மானமாகக் கூறியதும் கனகத்துக்குக் கோபந்தான் ஏற்பட்டது. இந்தச் சம்பாஷணைகளில் ஒன்றைத்தான் கதையின் ஆரம்பத்தில் பார்த்தோம். இந்தமாதிரி பல சம்பாஷணைகள் நடந்த பின்னர், "உன்பாடு உன் பெண்டாட்டி பாடு! கூடப்பிறந்த பிறப்பாயிற்றே என்று என் மனசு கேட்கவில்லை; சொன்னேன். ஆனால் ஒரு சமயம் அக்கா சொன்னது நிஜம் என்று உனக்குத் தெரியாமல் போகாது!" என்றாள் கனகம்.

* * *

**ப**ல மாதங்கள் சென்றன. சகோதரியின் குற்றச்சாட்டை ஜம்புநாதன் மறந்துவிட எத்தனித்தான். ஆயினும் அது அவனால் முடியவில்லை. நீலாவைச் சந்தேகிக்கவும் அவன் மனம் கூசினான். தான் உயிரென மதித்த அருமை மனைவி தனக்குத் தெரியாமல் பெற்றோர்களுக்குப் பணம் கொடுக்கவும் அதை மறைக்கப் பல அற்பத்தனமான பொய்கள் சொல்லவும் முயலுவாள் என்பதை அவன் மனத்தால்கூடக் கற்பனை செய்ய முடியவில்லை. அவன் சம்பளம் நூறு ரூபாய்தான். கையில் காலணாகூட மிஞ்சவில்லை. அவன் ஒரு செலவாளி. இந்த நிலையில் பிறருக்கு உதவமுடியாது என்பது நீலாவுக்குத் தெரியாதா!

நீலாவின் தோற்றத்தில் பல குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. இதைப் பார்த்த ஜம்புநாதனின் மனம் விம்மி விகசித்தது. மண வாழ்க்கையின் இன்பக்கனி விரைவில் கிட்டுமென்பதை, அன்று லேடி டாக்டர் கூறியபோது அவன் பரவசமடைந்தான்.

நீலாவுக்கு அப்பொழுது நிறை மாதம். உள்ளத்தில் மின்னிய மகிழ்ச்சியைச் சுற்றி கரியமேகங்கள் சூழ்ந்திருந்தன. ஏனெனில் நீலா மிகவும் பலவீனமான நிலையில் இருந்தாள். பிரசவ காலத்தில் கையில் பணம் தேவையாக இருக்குமே என்பதை நினைத்தபோது அவன் வேதனையடைந்தான். ஆபீஸில் நண்பர்கள் பலரையும் கேட்டுவிட்டான். அவனுக்கு உதவிசெய்யும் நிலையில் யாரும் இல்லை. மிகவும் மனக்கசப்புடனும் ஏமாற்றத்துடனும் வீடு திரும்பிக் கொண்டிருந்தான்.

ஜவுளிக்கடை குப்புசாமி செட்டியார் கடையருகில் வந்தபோது, கடைக்காரர் அவனுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு, "புடவை உங்களுக்குத் திருப்திதானுங்களா!" என்று கேட்டார். "எந்தப் புடவை!" என்றான் ஜம்புநாதன். "போன மாதம் இருபது ரூபாய்க்குக் கைத்தறிப் புடவை கொடுக்கவில்லையா! அம்மா வாங்கிக் கொண்டு போனாங்களே!" என்றார் செட்டியார். ஜம்புநாதனுக்கு இது ஞாபகம் வந்தது. திக்கென்றது அவனுக்கு. அந்தப் புடவை முப்பது ரூபாய் என்று நீலா தன்னிடம் கூறிப் பணம் வாங்கிக்கொண்டது ஞாபகம் வந்தது. "புடவை விலை இருபது ரூபாயாக இருக்கும்போது என்னிடம் முப்பது என்று பொய் சொல்லவேண்டிய காரணம் என்ன! முன்னொரு சமயம் அக்கா சொன்னது சரிதான் போலிருக்கிறது! அந்தப் பத்து ரூபாய் அடுத்த வீட்டுக்குப் போய்விட்டது போலிருக்கிறது!" என்று எண்ணியதும் அவனுக்கு வாழ்க்கையின் பேரிலேயே வெறுப்பு ஏற்பட்டது. "கஷ்டப்படும் பந்துக்களுக்கு உதவி செய்வதில் என்ன தவறு! ஆனால் ஏன் இவ்வளவு பொய்யும் புனைசுருட்டும்! நீலா கடைசியில் இப்படிப்பட்டவளா!" என்பதை நினைத்ததும் அவன் தன்னையே வெறுத்துக் கொண்டான். சே, சே! நீலா ஒருநாளும் துரோகம் செய்ய மாட்டாள் என்ற நம்பிக்கை உடனே ஏற்பட்டது. செட்டியாருக்கு ஏதோ பதில் சொல்லி விட்டுப் புறப்பட்டவன் வெகு வேகமாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். "சாமி!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அவன் வழக்கமாகப் பால் போடும் பால்காரன். "போனமாதம் பால் பணம் பாதிதான் கொடுத்தீங்க. இந்த மாதமும் பாதிதான் வந்தது. அடுத்தமாதமாவது பாக்கியை யெல்லாம் சேர்த்து மொத்தப் பணமாகக் கொடுத்திடுங்க, அம்மா உங்க கஷ்டத்தைப் பற்றிச் சொன்னாங்க!" என்றான் பால்காரன்.

ஜம்புநாதனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. போனமாதமும், இந்த மாதமும் காலணா பாக்கியில்லாமல் பால் கணக்கைப் பார்த்துப் பணத்தை நீலாவிடம் கொடுத்திருந்தான். அந்தப் பணத்தைப் பூராவும் பால்காரனிடம் கொடுத்து விட்டதாக நீலா தெரிவித்திருந்தாள். இது என்ன ஏமாற்றம்! இது என்ன சூது! அவன் மனத்தில் ஆத்திரமும் வெறுப்பும் தலை தூக்கியது. பால்காரனுக்கு ஏதோ பதில் சொல்லி விட்டு வீட்டை நோக்கி விரைந்து வந்தான்.

நீலாவின் தகுதியற்ற செய்கைக்கு இந்த இரண்டு சாட்சிகள் போதாதா! இதை அவளிடம் கேட்காமல் விடலாமா!

உள்ளே விரைந்து வந்த ஜம்புநாதன் எதிரே கண்ட காட்சியைக் கண்டு திடுக்கிட்டு நின்றான்.

நீலா பலவீனமான நிலையில் படுக்கையில் கிடந்தாள். அக்கா கனகம் கவலை தோய்ந்த முகத்துடன் அருகில் நின்று கொண்டிருந்தாள். "சற்று முன் ஒரு தடவை நீலாவுக்கு மயக்கம் போட்டு விட்டது. இப்பொழுது தான் மூர்ச்சை தெளிந்து கண் விழித்தாள்!" என்றாள்.

நீலா ஜம்புநாதனை சமிக்ஞை செய்து கூப்பிட்டாள். அவன் அருகில் வந்ததும், "எனக்குப் பிரக்ஞை இருக்கும் போதே சொல்லிவிடுகிறேன். செலவுக்கு என்ன செய்வது என்று கவலைப்படாதீர்கள். நீங்கள் அவ்வப் பொழுது செலவுக்குக் கொடுத்த பணத்தில் கொஞ்சம் கொஞ்சம் மிச்சப் படுத்தி நூறு ரூபாய் சேர்த்து என் பெட்டியில் வைத்திருக்கிறேன். பால்காரனுக்குப் போனமாதம் பாதிப் பணம்தான் கொடுத்தேன், எதற்காகத் தெரியுமா! இந்தச் சமயத்தில் உபயோகப்பட வேண்டும் என்றுதான். நீங்கள் செலவுகாரர். பத்திரமாக இருக்கவேண்டும் என்றுதான் ஒளித்து வைத்திருந்தேன். அக்காவுக்கும் பண முடை. இதனால்தான் அவரிடம் கூட நான் சொல்லவில்லை" என்று கூறி உலர்ந்த தன் உதடுகளை நாவினால் தடவி விட்டுக் கொண்டாள்.

"நீலா சமர்த்து!" என்றாள் கனகம்.

ஜம்புநாதன் வருத்தத்துடன் நீலாவைப் பார்த்தான். "உன்னையும் நான் சந்தேகித்தேனே!" என்று அவன் பார்வை கூறியது. ஆனால் அந்தப் பார்வையில் வருத்தத்தை விட அளவு கடந்த பெருமையே அதிகம் இருந்தது.




[அகில உலகச் சிறு கதைப் போட்டிக்காக “ஹிந்துஸ்தான் டைம்ஸ்” பத்திரிகை நடத்திய அகில இந்தியச் சிறுகதைப் போட்டிக்கு அனுப்பப்பட்ட தமிழ்க் கதை-3.]

கெட்டி மேளம் வாசித்தான் நாதஸ்வர வித்வான் ராஜுவேலு. வஸந்தியின் கழுத்தில் அந்த மங்கள நேரத்தில் தங்கள் வாழ்வுப் பெருநாளின் சின்னமாக மங்கலச் சரடைக் கட்டி மகிழ்ந்தான் ராஜு. நாணமும் மகிழ்ச்சியும் குலவும் தன் முகத்தை நிமிர்த்தாமலே ஏற இறங்கப் பார்த்து விட்டு என் பக்கம் திரும்பினாள் என் மனைவி. அவள் பார்வை என் உள்ளத்தின் அடியாழத்தில் புதைந்து கிடந்த எத்தனை எத்தனையோ எண்ணங்களையும் கடந்த கால நினைவுகளையும் கிளப்பிவிட்டது.

கையில் வெற்றிலை பாக்குத் தட்டுடன் என்னைப் பார்த்து இலேசாகப் புன்னகை செய்தாள் அவள். அப்புறம் அந்தப் பெண்களின் கும்பலில் மாயமாய் மறைந்து விட்டாள்.

“நான் மாடி அறையில் போய்க் கொஞ்சநேரம் உட்கார்ந்திருக்கிறேன். முகூர்த்தம்தான் ஆகிவிட்டதே!” என்று நண்பர் ராமச்சந்திரனிடம் சொல்லிவிட்டு மாடிக்குப் போய்த் தனியாக உட்கார்ந்தேன். எதிரே எல்லையில்லாமல் விரிந்து கிடந்த வானவெளி என்னுடன் இரகசியம் பேசியது. கலியாணக் கும்பலின் சந்தடியிலிருந்தும் விலகி இங்கு தனியாக வந்து அமர்ந்ததும் ஏதோ சோனை மழை பெய்து ஓய்ந்தமாதிரி இருந்தது. அமைதி நிரம்பிய அந்தச் சூழ்நிலையில் என் நெஞ்சத்திலிருந்தும் எழுந்த நினைவுச் சுருள்கள் என் கண்ணெதிரே படலம் படலமாக அவிழ்ந்து விரிந்தன.

* * *

சீராஜாவை நான் பெண் பார்க்கச் சென்ற அன்றும் இன்றுபோலத்தான் என்னுள்ளத்தில் எண்ணங்கள் குமுறிக் கொண்டிருந்தன. ஆனால் அவை எதிர்காலத்தைப் பற்றிய இன்ப நினைவுகள். இன்றோ கடந்த காலக் குப்பைகள்!

அப்பொழுது எனக்கு வயது இருபத்தைந்து. இளமையின் முறுக்கு என்னுடலில் நன்றாகப் பரவியிருந்தது. பி. ஏ. பாஸ்செய்து 'எக்லோரா பாங்கி'ல் குமாஸ்தா உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தேன். மானேஜரின் ஆதரவு 'பதவியில் எனக்கு முன்னேற்றம் உண்டு' என்ற நம்பிக்கையை ஊட்டியிருந்தது. வீட்டிலே என் தாயையும் என்னையும் தவிர வேறு யாரும் கிடையாது. அப்பா வைத்து விட்டுப் போன வீடு, காணி நிலம், என் வருமானம் இவற்றுடன் என் வாழ்க்கை வறட்சியற்ற ஜீவ நதியாகச் சென்று கொண்டிருந்தது.

அன்று காலை மட்டும்தான் காரியாலயம் உண்டு. கடிகாரத்தில் மணி இரண்டடித்ததும் காரியாலயத்திலிருந்த மற்றக் குமாஸ்தாக்களெல்லாம் எழுந்து சென்று விட்டனர். எதிரில் உட்கார்ந்திருந்த சாமிநாத சர்மாவுடன் பேசிக் கொண்டிருந்ததில் எனக்கு நேரம் போனதே தெரியவில்லை. 'சர்மா' எங்கள் 'பாங்கி'ல் 5 000 ரூபாய் போட்டு வைத்திருந்தார். அது விஷயமாக என்னைக் கண்டு பேச வந்திருந்த அவர், மூன்று மணி வரை ஆபீஸிலேயே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்து விட்டு, போகும்பொழுது அவருடைய காரிலேயே என்னையும் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அன்றுதான் நாங்கள் பழக ஆரம்பித்திருந்த போதிலும், அவர் என் வாழ்க்கையில் மிகவும் அனுசரணையாக இருப்பவர் போலத் தோன்றினார்.

கார் பாதி வழி வந்து கொண்டிருந்தபோது, எங்கள் பேச்சு காரியாலய விஷயத்திலிருந்து எனது கலியாண விஷயத்திற்கு வந்திருந்தது.

“என் ஒன்று விட்ட தம்பிக்குப் பதினெட்டு வயதில் ஒரு பெண் இருக்கிறாள். ஒரே பெண். எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்திருக்கிறாள். அழகாக இருப்பாள். உங்களுக்கு ஏற்ற பெண். நல்ல குணம். நீங்கள் அவளைக் கலியாணம் செய்து கொண்டு விட்டீர்களானால் நான் உங்கள் நண்பனாக மட்டுமல்லாமல் உறவினராகவும் ஆகிவிடுவேன். பெண்ணை உங்களுக்குக் கட்டாயம் பிடித்து விடும். இப்பொழுதுகூட நீங்கள் பெண்ணைப் பார்க்கலாம். அநேகமாக அவள் என் வீட்டில்தான் இப்பொழுது இருப்பாள்”

என்று கூறினார் அவர். எனக்கும் இலேசாகச் சபலம் தட்டியது. அம்மாவும் எப்பொழுதும் தொண தொணத்துக் கொண்டேதான் இருந்தாள். "என்னடாப்பா, நீ என்றைக்குத்தான் கலியாணம் பண்ணிக்கப் போகிறாய்!......எனக்கு இப்போ அரைகுறையாகத் தெரிகிற கண்களும் அவிந்து போனப்புறம்தான் கலியாணம் பண்ணிக்கப் போகிறாயோ என்னமோ!" என்றுதான் இன்று சாயந்திரமும் வீட்டுக்குப் போனதும் அவள் அலுத்துக் கொள்ளப் போகிறாள். இந்தப் பெண்ணைத்தான் பார்க்கலாமே!.........என்று எண்ணமிட்டேன். அவருக்கு ஒன்றும் பதில் கூறாமல் நான் உட்கார்ந்திருந்ததால், "என்ன, அதற்குள்ளாகவே கற்பனை செய்ய ஆரம்பித்து விட்டீர்களே! வீடு வந்து விட்டது; எழுந்திருங்கள்!" என்றார் சர்மா.

மௌனமாக இறங்கி அவர் வீட்டினுள் நுழைந்தேன். முன் கட்டில் சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டிருந்த மனிதரைச் சுட்டிக் காட்டி "இவர்தான் என் 'கஸின்' கிருஷ்ண சர்மா!" என்றார் சர்மா. சொல்லி விட்டு, எங்களிருவரையும் ஒருவருக்கொருவர் அறிமுகப்படுத்தி வைத்தார். என்னிடம் அந்தப் பெண்ணைப் பற்றிப் புகழ்ந்ததை விட இருமடங்கு அதிகமாகவே என்னைப் பற்றித் தம் தம்பியிடம் புகழ்ந்தார் சர்மா. அவருடைய செய்கை எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. என்றாலும் வேறு வழியில்லாமல் அவர் சொல்வதையெல்லாம் பேசாமல் கேட்டுக் கொண்டுதானிருந்தேன்.

கூடத்தில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் நாங்கள் போய் உட்கார்ந்தோம்.

"சரோ, மூன்று பேருக்குக் காப்பி கொண்டு வா, அம்மா" என்று அதிகார தோரணையில் கூறினார் சர்மா. உள்ளேயிருந்து முப்பத்தைந்து வயது மதிக்கத் தக்க அம்மாள் வந்து முன்னேயிருந்த மேஜைமீது காப்பி டம்ளர்களை வைத்தாள்.

"சரோஜா எங்கே! நான் அவளையல்லவா காப்பி கொண்டுவரச் சொன்னேன்!" என்று என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டி விட்டுக் கூறினார் கிருஷ்ண சர்மா.

விஷயத்தைப் புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக மெல்லிய புன்னகை யொன்றை வீசி விட்டு, "மாடியி லிருக்கிறாள். நான் போய் அவளை அனுப்புகிறேன்" என்று கூறிச் சென்றாள் அந்த அம்மாள். அவள்தான் கிருஷ்ண சர்மாவின் மனைவி என்றும், சரோதான் நான் பார்க்க வந்திருந்த பெண் என்பதையும் ஊகித்துணர்ந்து கொண்டேன்.

சரோஜா வந்தாள். "பொங்கி வரும் நல்லிளமைப் போதவிழ்ந்து வீசுவதாம் புன்னகை பெய்" வதனத்தை மெதுவாக நிமிர்த்தி ஓரக்கண்களால் ஒரு முறை என்னைக் கூர்ந்து பார்த்தாள். நானும் பார்த்தேன். இளமையும் அழகும் சேர்ந்து குலவும் அவள் மேனி அப்பொழுது என்னை மயக்கித்தான் விட்டது. அவள் ஊஞ்சல் கம்பியைப் பிடித்துக் கொண்டே நின்று கொண்டிருந்தாள். சர்மா என் முகத்தை உன்னிப்பாகக் கவனிப்பதைக் கண்ட நான் 'சட்'டென்று திரும்பினேன். அவர் பார்வை, "பெண் எப்படி யிருக்கிறாள், பார்த்தீர்களா!" என்று கேட்பது போலிருந்தது. ஆனால் அவர் அப்படிக் கேட்கவில்லை. "சரோஜா பாடுவதை நீங்கள் கட்டாயம் கேட்க வேண்டும்! அத்தனை நன்றாகப் பாடுவாள்! எங்கள் பெண்ணைப் பற்றி நாங்கள் உயர்த்திக் கொள்வது நன்றாக இல்லைதான்: இருந்தாலும் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டும் பாருங்கள்" என்று சம்பிரதாயமாகப் பேசினார் சர்மா. நான் ஒன்றுமே பதில் கூறவில்லை. அதற்குள் உள்ளேயிருந்து வீணையை எடுத்து வந்த சரோஜாவின் தாயார், "சரோ, புதிதாக வாசித்தாயே, அந்தக் கீர்த்தனத்தை வாசித்துக் காட்டம்மா" என்று கூறினாள்.

சரோஜாவின் வீணா கானத்தில் நான் என்னை மறக்கவில்லை என்றாலும், அவள் வீணையைக் கையில் தாங்கி வீற்றிருந்த அந்தக் காட்சி என் மனத்தில் எண்ணற்ற இன்ப உணர்ச்சிகளை எழுப்பி விட்டது.

அப்புறம்.........! என் வீடு வரை என்னுடனேயே வந்து என் சம்மதத்தையும் என் தாயாரின் சம்மதத்தையும் பெற்றுக் கொண்டுதான் சென்றார் சர்மா.

* * *

சரோஜா என் வாழ்க்கைத் துணைவியானாள். கலியாண தினத்தன்று அவள் யாருடனுமே கலகலவென்று பேசினதாகத் தெரியவில்லை. அம்மா சொன்னாள்: "பெண் ரொம்ப அடக்கம். கேட்ட கேள்விக்கு மட்டும் நிதானமாக 'டக்'கென்று ஒரு வார்த்தையில் பதில் சொல்கிறாள்" என்று. சரோஜா தன் நாட்டுப் பெண்ணாக வாய்த்தது அம்மாவுக்கு அளவில்லாத பெருமையை அளித்தது. இந்தக் காலத்தில் படித்த பெண்கள் இத்தனை அடக்க ஒடுக்கமுள்ள பேசாமடந்தைகளாக இருப்பது மிகவும் ஆச்சரியம் என்றுதான் அப்பொழுது வியந்தேன். ஆனால் அன்று இரவுதான் அவளுடைய அடக்கத்தின் காரணம் எனக்குப் புரிந்தது. ஆனால் அந்தக் காரணமே என் வாழ்க்கையில் இவ்வளவு பெரிய திருவிளையாடல் புரியும் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.



பள்ளியறையில் பரவியிருந்த நறுமணம் என் நரம்புகளைத் தாக்கி உணர்ச்சிகளைக் கிளறி விட்டது. "சரோ, இப்படி வந்து உட்காரேன்!" என்றேன் ஆசை வெறியுடன். நாணிக் கோணி நின்று கொண்டிருந்த அவள் மெல்ல நகர்ந்து என் அருகில் வந்து அமர்ந்தாள். அவளது தளிர்க் கரங்களைப் பற்றி என் நெஞ்சுடன் அழுத்திப் பிடித்துக் கொண்டேன். அவள் அப்பொழுதும் பதுமையாகத்தானிருந்தாள். முகத்திலே மட்டும் புன்னகை மணம் வீசியது. அதை அள்ளி அள்ளிப் பருகினேன். போதை வெறி வலுத்தது. கொஞ்சும் மொழிகள்; காதல் வசனங்கள்; அவளுடைய அங்க வர்ணனைகள்—என்ன வெல்லாமோ பிதற்றினேன். அவள் ஏனோ வாய் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை. என் பொறுமை எல்லையை மீறியது.

"என்னுடன் பேசப் பிடிக்க வில்லையானால் என்னைக் கலியாணம் செய்து கொள்ள ஏன் சம் மதித்தாய்!" என்றேன் வெறுப்புடன். ஆசை வெறி வெறுப்பை அவ்வளவாக வளர விடவில்லை.

அவள் எனக்கு உடனே பதிலளிக்க நினைத் திருக்க வேண்டும். அவள் உதடுகள் துடித்தன. வார்த்தைகள் வெளி வரவில்லை. அவள் கண் களின் ஓரத்தில் சிறு நீர்த்திவலை வடிந்திருப்பதைக் கண்டேன். வெறுப்பை இரக்கம் வென்றது. ஆசை ஆதரவாய் வளர்ந்தது.

"என் அழகிய சரோ, என்ன வேண்டும்!" என்றேன் அவள் உடலை உலுக்கியவாறே!

அவள் மெதுவாக என்னை நிமிர்ந்து பார்த்தாள்.

"ஒன்று மில்...ல்...லை. எனக்குக் கொஞ்சம் தி...தி...திக்குவாய். அதுதான்..." அவள் அதற்கு மேல் பேசவில்லை. விம்மத் தொடங்கிவிட்டாள்.

"அட அசடே, இதற்குத்தானா அழுகிறாய்! கலியாணம் பண்ணிய பின் உன்னைக் கைவிட்டு விடுவேன் என்று நினைத்தாயா, என்ன! எங்கே துடைத்துக்கொள், சரோ!" என்றேன் நான். கண்ணீரின் முன் என்னுள்ளத்தில் மூண்ட கனிவு நிறைந்த சொற்கள் இவை; அவள் அழு கையை நிறுத்தினாள். நம்பிக்கை நிறைந்த கண் களால் என்னை நன்றியுடன் பார்த்துவிட்டு என் மீது சாய்ந்து கொண்டாள்.

* * *

அழகு குணம் இரண்டையும் ஒருங்கே படைத்த இறைவன் அதில் இக்கச் சிறு களங் கத்தை ஏற்படுத்துவானேன். ரோஜா மலரில் ஏன் முட்கள் நிறைந்திருக்கின்றன! வெண்மதி யில் ஏன் களங்கம்! சரோஜா ரோஜா மலரா! அப்படியானால் முகர்ந்து நுகர்ந்ததும் மண மிழந்து காய்ந்துவிடுமோ! இல்லை......அவள் உவமை கூற முடியாதவள். ஆனால்......அந்தத் திக்கு வாய் தடையின்றித் தன் உணர்ச்சிகளை அவள் வெளியிட முடியாமல் செய்து விடுகிறதே! நான் அதை ஒரு பெருங் குறையாகக் கருத வில்லை. என்றாலும் என் இதயத்தின் ஒரு மூலை யில் அது சிறியதோர் இடத்தைச் சுவீகரித்துக் கொண்டிருப்பதை என் மனத்திலெழும் சிந்தனைச் சிதறலினின்றும் நான் தெரிந்து கொண்டேன்.

சரோஜா தடையின்றிச் சரளமாகப் பேசப் பாடுபடும் பொழுதெல்லாம் இதயத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் அது தலை தூக்கிப் பார்க்கும். கொஞ்சநேரத்திற்கு நான் என் மனச் சாட்சியுடன் தர்க்கங்கள் புரிந்து கொண்டிருப்பேன், மௌன நிலையிலே. அவளது வளையொலி கேட்கும்; மோக னப் புன்னகை கண்முன் தோன்றும். அந்தக் குறை தலையைக் கவிழ்த்துக் கொள் ளும். பிறகு அன்பு விரிந்த அறி வுடன் நான் அவளுடன் குலவுவேன். இப்படியே என் வாழ்வு நடந்தது!



எனக்குக் கலியாணமான ஒரு வரு டத்திலேயே நான் எதிர் பார்த்த தற்கு மேலாகவே, பதவியில் எனக்கு முன்னேற்றம் கிட்டிவிட்டது. கலி யாண முடிந்த மறு மாதத்திலேயே தலைமைக் குமாஸ்தாவாக ஆன நான் இப்பொழுது ஆபீஸ் காரியதரிசி ஆகி யிருக்கிறேன். உத்தியோகத்தின் உயர்வைவிட, அதிகமாகவே என் வாழ்க்கைத் தேவைகளும் அந்தஸ் தும் வளர்ந்தன. நடுத்தர வகுப்பா ரின் நண்பனாக இருந்த நான் மெல்ல மெல்ல செல்வந்தர்களின் சிநேகத் தைப் பெற்று விட்டேன். இல்லை, அது என்னைத் தேடிக்கொண்டு வந்து விட்டது. பணத்தின் வரவு வளர்ந்த தும் அவற்றைச் செலவழிக்கும் சந் தர்ப்பங்களும் தாமே பெருகின.

வெளித் தோற்றத்திற்கு என் வாழ்க்கை இன்பப் பூஞ்சோலை யாகவே தோன்றியது. ஆனால் உண் மையில் என் உள்ளத்தில் இருந்த அமைதி குறைந்து வந்தது. அதிகம் சொல்வானேன்! சரோஜாவின் திக்கு வாய் என் மனக் கண்களுக்குச் சகிக்க முடியாத பெருங் குறையாக உரு வெடுத்தது. என் நண்பர்களின்

இல்லங்களில் எனக்கு எப்பொழுதாவது விருந்தளிப்பார்கள். அவர்களுடைய மனைவிகள் எல்லோரும் விருந்தில் கலந்துகொண்டு உல்லாசமாகக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும்பொழுது என்னுள்ளத்தை வேதனை பிடுங்கித் தின்னும். அந்தச் சமயத்திலேதான் நண்பர் ஒருவர் என்னைக் குசலப்பிரச்னம் செய்வார். "என்னஸார், நானும் எத்தனை நாட்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேனே! ஒரு நாளாவது உங்கள் மனைவியை நம் வீட்டுக்கு அழைத்து வரக்கூடாதா!" என்பார் அவர். இந்தப் பிரச்னை என் மனத்திலும் எழத்தான் செய்தது. ஏன், சரோவிற்கு அழகில் என்ன குறைவா! நாகரிகத்தில் குறைவா! இல்லையே! ஆனால் இவர்களுடன் பேசும்பொழுது அவளது திக்கு வாயைக் கண்டு கேலி செய்யாம விருப்பார்களா! என் முன்னிலையிலேயே என் மனைவி இகழப்பட்டால் அதை என்னால் சகிக்க முடியுமா!' ஆகவே, அவளை எந்த வீட்டுக்கும் அழைத்துப் போகாமலிருப்பதுதான் நல்லது என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டேன் நான்.

என்னை எங்கள் ஆபீஸின் தலைமைக் காரியாலயத்திற்குச் சில அவசர அலுவல்களின் நிமித்தம் மாற்றினார்கள். ஆகவே சென்னையில் இருந்த நண்பர்களைப் பிரிந்து பம்பாய் செல்ல நேரிட்டது. ஒரு வருட காலம்தான் பம்பாயில் இருக்க நேரிடுமென்று எனக்குக் கிடைத்த உத்தரவில் கண்டிருந்தபடியால், மனைவியை அவள் பிறந்தகத்திலேயே விட்டுவிட்டுச் செல்லத் தீர்மானித்தேன். அவளிடம் தெரிவித்தேன். அவள் கண் கலங்கினாள். "ஹோட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்து வருமா!" என்று ஆதரவோடு கேட்டாள் அவள். அவளுடைய பேச்சில் இருந்த தெளிவு அவளுக்கு என் மீதிருந்த அளவிலா அன்பைப் புலப்படுத்தியது. எப்பொழுதுமே, உணர்ச்சி வேகத்தில் பேசும் பொழுது திக்குவாய் அவளைத் தொந்தரவு செய்வதில்லை.

தீர்மானம் சிறிது நெகிழ்ந்தது. சபலம் மனதை அரித்தது. சரோவை உடன் அழைத்துச் செல்வதா, வேண்டாமா என்பதே இப்பொழுது என் மனத்தில் உலவிய பிரச்னை. ஆனால் ஒரு சிறிய சம்பவம் என் உள்ளத்தைத் தாக்கிய வேகத்தில் சபலம் பொடிந்து தூளாகிவிட்டது. முதலில் செய்த தீர்மானமே நிலை பெற்றது. அதன் விளைவு!.........

அந்தச் சம்பவத்தைப் பற்றி இப்பொழுது நினைத்துப் பார்த்தால், மிகவும் சாதாரணமாகத் தான் தோன்றுகிறது. ஆனால், அன்றைக்கு அது எத்தனை பூதாகாரமாக என் முன் தோன்றியது! நடந்தது இதுதான் :

என் மாற்றலை முன்விட்டு நண்பன் ரகுராமன் வீட்டில் எனக்கு விருந்தளித்தார்கள். ரகுராமனின் மனைவி என் வீட்டுக்கு வந்திருந்து சரோவை வலுக் கட்டாயமாக அழைத்துச் சென்று விட்டாள். விருந்துக்குச் சென்னைக் காரியாலய மானேஜர், அவர் மனைவி, மற்றும் ஊரிலுள்ள சில பெரிய மனிதர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். விருந்தெல்லாம் முடிந்ததும் அவர்களெல்லாம் நிலா வெளிச்சத்தில் மொட்டை மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். பக்கத் தறையிலுள்ள பீரோவில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த மேலை நாட்டு இலக்கியப் புத்தகங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன் நான்.

நிலா முற்றத்தில் அவர்கள் பேசியவை தெளிவாகக் கேட்டன.

"சந்திரனின் மனைவி, அந்தக் காலத்துக் கர்ணுடகம் போல அல்லவா இருக்கிறாள். விருந்தில் கொஞ்சமாவது தன் வாயைத் திறந்தாளா, பார்த்தீர்களா! அவருடைய கல கலப்புக்கும் அவளுக்கும் சம்பந்தமே இல்லையே!" — ஒரு பிரமுகரின் விமர்சனம் இது.

"அதனாலென்ன ; சள சள வென்று எப்பொழுதும் பேசிக் கொண்டிருப்பது பெண்மையின் அழகையே கெடுத்து விடுகிறது. அடக்கம்தான் பெண்ணை அழகுள்ளவளாகச் செய்கிறது" என்று புகழ்ந்தார் யாரோ ஒருவர்.

பேச்சு என்னைப் பற்றியதாக இருக்கவே நான் உற்றுக் கேட்கலானேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை! 'அவளுடன் இன்று காலை பேசிக் கொண்டிருக்கும்போது எனக்குப் பீறிக்கொண்டு வந்த சிரிப்பை என்னால் அடக்கவே முடியவில்லை' என்றாள் என் மனைவி. அதனால்தான் அந்த அழகி யாருடனும் பேசவில்லை என்று தெரிகிறது. இருந்திருந்து ஒரு திக்குவாயைத் தேடிப் பிடித்திருக்கிறாரே சந்திரன்!" என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

எனக்கு என் மீதே கோபம் கோபமாக வந்தது. பம்பாய்க்குச் சரோஜாவைக் கூட்டிக் கொண்டு போவது என்ற எண்ணத்தை அந்த நிமிஷத்திலேயே கை கழுவினேன்.

நான் அவளை உடனழைத்துச் சொல்லப் போவதில்லை என்பதை அவள் அறிந்ததும் அழுதழுது அவள் கண்கள் சிவந்து விட்டன. என் கல்நெஞ்சைக் கரைக்கும் ஆற்றல் அவள் சிந்திய கண்ணீருக்கு இல்லை. அவளைப் பிறந்த வீட்டில் கொண்டு விட்டு விட்டு நான் பம்பாய்க்குத் தனியே புறப்பட்டேன். என் தாய் இந்த உலகை விட்டுப் போய் ஐந்து மாதங்கள் கழிந்து விட்டன. எனக்கு வேறு யாரைப் பற்றிக் கவலை!

* *
*

பம்பாயில் யாரிடமுமே நான் எனக்குக் கலியாணம் ஆனதாகத் தெரிவிக்கவே இல்லை. நான் குடியிருந்த வீட்டின் சொந்தக்காரருக்கு ஒரு



விருந்தளித்தவர் (விருந்தாளியின் மகனைப் பார்த்து) :—ராமு, இன்னும் இரண்டு லட்டு சாப்பிடேன்!

ராமு :—வேண்டாம், மாமா! என் வயிற்றில் துளிக்கூட இடமில்லை.

விருந்தளித்தவர் :—நிஜார் பாக்கெட்டில் கொஞ்சம் லட்டு போட்டுக் கொண்டு போயேன். வழியில் தின்னலாம்!

ராமு :—வேண்டாம், மாமா! என்னுடைய நிஜார் பாக்கெட்டில் கூட இடமில்லை!

பெண் இருந்தாள். நவநாகரிகத்தின் இலக்கியமாக விளங்கிய அவள் என்னுள்ளத்தைத் தன் வயப் படுத்த எத்தனை எத்தனையோ அஸ்திரங்களை தினமும் பிரயோகித்து வந்தாள். அவை என்னை முற்றிலும் மாற்றி விடவில்லை என்றாலும், ஓரளவு என் சித்தத்தைக் கலக்கத்தான் வைத்தன. அவ ளுடைய அழகை விட அந்தக் கொஞ்சும் விழிகள் என்னைத் தொடத்தான் செய்தன.

என் மனத்தில் விளைந்த இந்த உணர்ச்சியை அவள் தந்தை என் நடைமுறையில் ஏற்பட்ட மாறுதலிலிருந்தும் தெரிந்துகொண்டிருக்க வேண் டும். ஒருநாள் அவராகவே என்னிடம் வந்து வாய் விட்டுக் கேட்டார்.

"நம்ம ஸ்யாமாவுக்கு ஏற்ற வரனைக் கிடைக்க வில்லையே என்று ரொம்ப நாளா இருந்த கவலை இப்போதுதான் விட்டது" என்று என்னை வெற்றிச் சிரிப்புடன் ஒருமுறை பார்த்துவிட்டுக் கூறினார் அவர். இதைக்கூடப் புரிந்துகொள்ளத் தெரியாத ஜடமா நான்!......ஆனால் என்ன பதில் சொல்வது!......அசட்டுச் சிரிப்புச் சிரித் துக்கொண்டே மௌனமாகப் போய்விட்டேன்.

வரவிருப்பது ஆபத்தா, நல்ல விஷயமா என்று ஆலோசிக்கும் திறன் அப்பொழுது எனக்கு இல்லை. பம்பாயில் என் அந்தரங்க நண்பனாக இருந்தவன் ராமச்சந்திரன் ஒருவன்தான். அவனுக்கு மட்டும் எனக்குக் கலியாணமாகி யிருப்பது தெரியும். ஆனால் அவளுக்குத் திக்குவாய், அதனால்தான் நான் அவளை அழைத்து வரவில்லை என்ற இரகசியம் அவனுக்குத் தெரியாது. ஸ்யாமளா வின் விஷயமாக அவன் அடிக்கடி என்னை எச்ச ரித்திருக்கிறான், அவனிடமே என் மனத்தில் இருப்பதை யெல்லாம் சொல்லி விட்டால்தான் என்ன!...அவன் வாழ்க்கையில் நல்ல அனுபவம் பெற்றவனல்லவா!......

ராமச்சந்திரன் என் அனுபவத்தை யெல்லாம் நிதானமாகக் கேட்டு விட்டு நீண்டதொரு பெரு மூச்சு விட்டான். அப்புறம் அமைதியாகச் சொல்ல வாரம்பித்தான்.

"சந்திரா, எனக்கு வேலூரில் ஒரு பெண் ணிருக்கிறாள். உன்னிடம் முன்னமேயே சொல்லி யிருக்கிறேன். அவளுக்கு வலதுகால் பாதம் இலேசாக மடிந்திருக்கும். இயற்கையாகவே பிறவி யில் ஏற்பட்ட குறை இது. பெண் நன்றாகத் தான் இருக்கிறாள். இந்த ஊனம் என்ன இருந் தாலும் ஊனம்தானே! ஆனால் அவள் தான் எல்லாப் பெண்களையும் போல வாழ வேண்டும் என்ற ஆசையைத் துறந்து விட முடியுமா! உலகத்தில் பிறந்துள்ள ஆண்கள் எல்லோருமே உன்னைப்போல 'சிறியதொரு குறை கூட இல்லாத பெண் தெய்வத்தைத்தான்' தன் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்வேன் என்ற விரதத் தைக் கடைப்பிடித்து விட்டால்......! இந்தப் பெண்களின் கதி என்ன! ஸ்யாமளா அழகாக இருக்கிறாள். கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறாள், வஞ்சி போல ஒயிலாக நடந்து வருவது ஒன்றைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும். உண்மை தான். ஆனால் அவள் உள்ளத்தை நீ அறிவாயா! இன்று அவள் தோற்றம் உன்னை மயக்குகிறது. அன்றும் சரோஜாவைப் பார்த்து மயங்கினாய். ஆயின் இந்தச் சிறு குறை இன்று பெரிதாகி உன் மனத்தைக் கலக்குகிறது. நினைத்துப் பார். உன் மனைவி அங்கு உன் பிரிவை நினைத்துப் புலம் பிக் கொண்டிருக்கிறாள். தனக்கு ஏற்பட்ட சிறு குறை தன் வாழ்வையே பாழ்படுத்துவதைக் கண்ட அவள் உள்ளம் படப்போகும் அவதியை



பிள்ளை :— அம்மா, அடுத்த வீட்டு ராஜு குதிரையையே பார்த்த தில்லை போலிருக்கிறது!

தாயார் :— உனக்கு எப்படியடா கண்ணே தெரியும்?

பிள்ளை :— நான் குதிரையின் படம் ஒன்று போட்டு அவனிடம் காண்பித்தேன். அவனுக்கு அது என்னவென்றே தெரியவில்லை.

எண்ணிப் பார். அல்லது அவளைப் போலவே உனக்கு ஒரு குழந்தை பிறப்பதாக வைத்துக் கொள். அந்தக் குழந்தையின் திருமணத்தைப் பற்றி நீ என்ன நினைப்பாய்! சந்திரா, என் மகள் வஸந்தியின் கலியாணத்தைப் பற்றி எண்ணி நான் வருந்துவது எனக்குத் தெரியும். வாழ்வில் உனக்கு இன்னும் அனுபவம் போதவில்லை. அனுபவத்தில் தெளிந்தெடுத்த அறிவு பிறந்து விட்டால் துரும்பைத் தூணாக மதித்துக் கலங்க மாட்டாய்......"

ராமச்சந்திரன் ஒரே மூச்சில் இவ்வளவையும் சொல்லி முடித்தான். ஒவ்வொரு சொல்லும் என் மூளையைத் தாக்கியது!

"ராமு, வஸந்திக்கு நல்ல வரன் தேடித் தரும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. நானும் என் மனைவி சரோஜாவும் வந்திருந்து திருமணத்தை நடத்தி வைக்கிறோம்" என்றேன் உறுதி கலந்த குரலில்.

இயற்கைச் சூழ்நிலை எனக்கு வசதி யளித்தது. என் கீழ் வேலை செய்யும் குமாஸ்தா ராஜு முழு மனத்துடன் வஸந்தியை மணக்க ஒப்புக்கொண் டான். அவனது பெருந்தன்மை என்மீது பளா ரென ஓர் அறை விட்டு மங்காத அனுபவத் தழும்பை என் நினைவில் பதித்தது.

சரோ பம்பாய்க்கு வந்துவிட்டாள். உண்மை யாகவே இப்பொழுது அவளுக்கு அவ்வளவு திக்கு வாய் இல்லையோ என்னவோ, புனர் ஜன்மம் பெற்றுவிட்ட என் அறிவுக் கண்களுக்கு அது ஓர் குறையாகவே தோன்றவில்லை.

* * *

"என்னடா, முகூர்த்தம் ஆனதுமே இங்கே வந்து விட்டாயே, இதோ என் நண்பரொருவர் தம்பதிகளுக்கு வாழ்த்தனுப்பி யிருக்கிறார் பார். ஏதோ விநோதமாக இருக்கிறது" என்று சொல் லிக் கொண்டே வந்த ராமச்சந்திரன் என் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

அதில் கீழ்கண்ட கவிதை வரிகள் மட்டுமே காணப்பட்டன :—

"வாழ்வாம் புத்தினில் வாழும் விடையில்லை
வாகாய் உணர்ந்திடும் பெரியோரே
தாழ்வாம் நினைவிலும் தருவோர் பதவியைத்
தாமே எளிதில் அடைவாரே!"

நான் அதைத் திரும்பத் திரும்பப் படித்தேன்.






# தாத்தா!

கமலாவும் சந்திரனும் ரொம்ப விஷமக்காரர்கள். ஞாயிற்றுக்கிழமை வந்து விட்டாலே வீடு இரண்டாகி விடும். பள்ளிக்கூடம் இருக்கும் நாட்களில் அவர்களைப் படுக்கையிலிருந்து எழுப்புவது ரொம்பக் கஷ்டமாக இருக்கும். காலையில் எட்டு மணி வரையிலும் தூங்குவார்கள். ஆனால் ஞாயிற்றுக்கிழமை யன்று மட்டும் விடியற்காலம் ஐந்து மணிக்கே எழுந்திருந்து வீட்டை அதம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். கோபக்காரத் தாத்தாவை ஏதாவது வேடிக்கை செய்வது என்றால் அவர்களுக்கு ரொம்பப் பிரியம். தாத்தாவிடம் போய் ஏதேனும் பரிகாசம் செய்வார்கள். "தாத்தா, தாத்தா! கொஞ்சம் பொடி கொடுங்கோ!" என்று பரிகசிப்பார்கள். தாத்தா எழுந்து அவர்களை அடிக்கக் கிளம்புவார். அப்பொழுதுதான் அவருக்குத் தம் சட்டை நாற்காலியுடன் கட்டி இருப்பது தெரிய வரும்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. குழந்தைகளின் சேஷ்டை காலை ஐந்து மணிக்கே ஆரம்பித்து விட்டது. காலை பதினொரு மணி இருக்கும். சாப்பிட்டு விட்டுத் தாத்தா அப்பாடி என்று சாய்வு நாற்காலியில் சாய்ந்து, "குழந்தைகளா! கொஞ்ச நாழிகை தூங்குகிறேன். சத்தம் போடாதிங்கோ! சத்தமில்லாமல் இருக்கும் விளையாட்டாக ஏதேனும் விளையாடுங்கோ!" என்று கூறிவிட்டுக் கண்ணயர்ந்து விட்டார்.

ரொம்ப நேரத்திற்குப் பிறகு தாத்தா கண் விழித்தார். சட்டென்று அவர் கண்கள் தாம் போர்த்திக்கொண்டிருந்த கம்பளியின்மேல் போயிற்று. "ஐயோ! எனக்கு ஏதோ உடம்புக்கு வந்து விட்டதுபோலிருக்கிறது. இல்லை என்றால் என் கால்கள் இப்படி நீண்டு போகக் காரணம் என்ன?" என்று அலறினார்.

சாய்வு நாற்காலியிலிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு முக்காலியை வைத்து, முக்காலிக்கும் நாற்காலிக்கும் இடையில் இரண்டு நீளக் கழிகளை வைத்து அவற்றில் தாத்தாவின் ஜோடுகளை மாட்டிக் கம்பளியால் போர்த்திவிட்டான் சந்திரன். இதுதான் தாத்தாவை அவருடைய கால்கள் நீண்டு போய் விட்டதாகப் பயமுறுத்தி விட்டது. கம்பளியைத் திறந்து பார்த்ததும் அவருக்கு விஷயம் விளங்கி விட்டது.

"தாத்தா! நீதான் சத்தம் போடாத விஷமமாகச் செய்யச் சொன்னாயே! நாங்கள் செய்த விஷமம் கொஞ்சமாகிலும் சத்தம் கேட்டதா, பார்!" என்று சொல்லிவிட்டுக் குழந்தைகள் இருவரும் கலகலவென்று சிரித்துக் கொண்டே ஓடிப் போனார்கள்.






வேலனுக்குக் கொஞ்சம் நிலமும் ஒரு வீடும் இருந்தது. அவன் தன் சாப்பாட்டுக்காக யார் கையையும் எதிர்பார்க்க வேண்டாம். அவன் தன் நிலத்தில் பாடுபட்டு உழைத்து, தன் மனைவியையும் மகனையும் காப்பாற்றி வந்தான்.

வேலனுடைய வாழ்க்கையிலேயே மிகவும் உற்சாகத்தை அளித்து வந்தது அவனிடம் இருந்த குதிரைதான். தன் கழனியைச் சுற்றிப் பார்ப்பதற்கு வேலன் அந்தக் குதிரையின் மேல் ஏறிக் கொண்டுதான் போவான். அந்தக் குதிரை நன்றாய் வேலனிடம் பழகி விட்டபடியினால், அவன் அதன் மீது ஏறிக் கொண்டு எங்கே போக வேண்டுமானாலும் தைரியமாய்ப் போவான். ஒரு நாள் கூட அந்தக் குதிரை வேலனைக் கீழே தள்ளியது கிடையாது. ஆகையினால் அவன் அதன்மேல் உயிரையே வைத்திருந்தான்.

அன்றைக்குக் காலையில் எழுந்ததும் வேலன் வழக்கம்போல் குதிரையின்மேல் ஏறிக் கொண்டு புறப்பட்டான். குதிரையும் 'டக் டக், டக் டக்' என்று ஜோராய்ப் புறப்பட்டது.

கொஞ்ச தூரம் போனதும் 'டிணிங்' கென்று ஏதோ ஒரு பொருள் கீழே விழுந்தது. வேலன் அதைப் பார்த்ததும் அவன் மனசுக்கு ரொம்ப வேதனையாய்ப் போய் விட்டது.

ஆமாம், கீழே கிடந்த அந்தப் பொருள் வேறொன்றும் இல்லை. அவன் குதிரையின் காலில் அடித்திருந்த லாடந்தான். லாடம் இல்லாமல் குதிரை எப்படி ஓடும்? ஆகையினால் வேலன் உடனே அதன் காலுக்கு லாடம் போட்டுவிட வேண்டும் என்று நிர்மானித்தான். உடனே குதிரையின் மேல் ஏறிக் கொண்டு லாடம் செய்யும் கொல்லன் வீட்டுக்குப் போனான்.

"என் குதிரையின் ஒரு காலிலிருந்த லாடம் தேய்ந்து விழுந்து விட்டது. உடனே வேறு லாடம் போட வேண்டும். என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான் வேலன்.

அதற்குக் கொல்லன், "வேலா, என்னிடம் குதிரை லாடம் இல்லை. செய்து தரலாம் என்றால் கரி கொஞ்சங்கூட இல்லை. கரி இல்லாமல் எப்படி இரும்பைக் காய்ச்சி வேலை செய்ய முடியும்? நீ ஒரு காரியம் செய்யேன். எங்கேயாவது கொஞ்சம் கரி சம்பாதித்துக் கொண்டு வாயேன். உன் குதிரை இங்கேயே இருக்கட்டும்!" என்றான்.

வேலன், "சரி. நான் போய்க் கரி சம்பாதித்துக் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டுக் குதிரையை அங்கேயே ஒரு மரத்தில் கட்டி விட்டு நேரே கரிக் கடைக்காரனிடம் போனான்.

"என் குதிரைக்கு லாடம் கட்ட வேண்டும். கொல்லன் லாடம் பண்ணுவதற்குக் கரி வேண்டும் என்கிறான். கொஞ்சம் கரி கொடேன்!" என்று கேட்டான்.

"என்னிடமும் கரி இல்லை, இருந்தால் நான் கொடுக்க மாட்டேனா? வேறு எங்கேயாவது போய்ப் பார்!" என்று சொல்லி விட்டான் கரிக் கடைக்காரன்.

வேலன் வருத்தத்தோடு புறப்பட்டான். கொஞ்சதூரம் போனதும் ஒருவன் வண்டியில் காய்கறிகளை வைத்துத் தள்ளிக் கொண்டு போனான். அவனைப் பார்த்ததும் வேலன் தன் குதிரையின் லாடத்தைப் பற்றிச் சொல்லிக் கரி வேண்டும் என்று கேட்டான். "என்னிடம் காய்கறிகள்தான் இருக்கின்றன. அடுப்புக்கரி கிடையாது!" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

வேலன் என்ன செய்வான், பாவம்! மனக் கவலையுடன் அங்கிருந்து சென்றான். அவனுக்கு எங்கே போய் யாரிடம் கரி கேட்பது




என்றே தெரியவில்லை. தன் அருமைக் குதிரைக்கு லாடம் கட்டாமல் இருக்கக் கூடாது என்று மாத்திரம் மனசில் தீர்மானம் செய்து கொண்டு போய்க் கொண்டேயிருந்தான்.

எதிரே ஒரு கிழவி வந்தாள். வேலன் வருத்த மிகுதியில் அவளைக் கவனிக்காதவன் போல் போனான். ஆனால் கிழவி தானாகவே அவனைக் கூப்பிட்டு நிறுத்தினாள்.

"ஏன் அப்பா, என்ன சமாசாரம்? ஏன் முகத்தை ஒரு மாதிரி வைத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள் கிழவி.

வேலன் அசிரத்தையோடு "என் குதிரையின் லாடம் தேய்ந்து கழன்று விழுந்து விட்டது. அதற்குப் பதிலாக வேறு லாடம் போட வேண்டும். அதற்காகக் கொல்லனிடம் போனேன். கொல்லன் கரியில்லை; ஒன்றும் செய்ய முடியாது என்று கூறி விட்டான். கரிக்கடைக்காரனிடம் போய்க் கேட்டேன். அவனும் கரியில்லையென்று சொல்லி விட்டான். இப்பொழுது என்ன செய்வதென்று தெரியவில்லை!" என்றான்



"என்னுடன் என் வீட்டுக்கு வா. நான் அடுப்புக்கரி தருகிறேன்!" என்றாள் கிழவி.

வேலன் கிழவியோடு ரொம்ப தூரம் போய்க் கொஞ்சம் கரி வாங்கிக் கொண்டு கொல்லன் வீட்டுக்கு வந்தான். அங்கே அவனுக்கு ஒரு பயங்கரம் காத்திருந்தது. அவன் கட்டின இடத்தில் குதிரையைக் காணோம். பரபரப்புடன் உள்ளே ஓடிப் பார்த்தான், கொல்லனையும் காணோம். அந்தக் கொல்லன் வேலனுடைய குதிரையைப் பற்றிப் புகழ்ந்து கொண்டிருப்பான். இன்று சாமர்த்தியமாகக் குதிரையை அபகரித்து விட்டான்! இப்பொழுதுதான் அவனுடைய நயவஞ்சகம் வேலனுக்குத் தெரிய வந்தது.

மூன்று நாட்கள் சென்றன. குதிரையைப் பற்றிய தகவலோ கொல்லனைப் பற்றிய தகவலோ தெரியவில்லை.

அன்று விடியற்காலை வேலன் வீட்டு வாசலில் குதிரை கனைக்கும் சத்தம் கேட்டது.

பழைய ஞாபகந்தான் இப்படித் தோன்றுகிறது என்று நினைத்து முதலில் அவன் சும்மா இருந்து விட்டான். மீண்டும், மீண்டும் அந்தக் கனைப்புச் சத்தம் கேட்கவே, அவன் இருப்புக் கொள்ளாமல் வாசலுக்கு வந்து பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! வேலனுடைய குதிரைதான் அங்கு நின்று கொண்டிருந்தது. அந்தச் சமயம் அவனை யாரோ கூப்பிட்ட குரல் கேட்டது.

அவன் யாருமில்லை, கொல்லன்தான்.

"வேலா, என்னை மன்னித்து விடு. வெகு நாட்களாக உன் குதிரையில் ஏறிச் சவாரி செய்ய வேண்டும் என்று எனக்கு ஆசை. முடியுமானால் அதைத் தட்டிக் கொண்டு போய்விட வேண்டும் என்பது என் நோக்கம். அதன் காரணமாகத்தான் உன்னிடம் கரியில்லை என்று பொய் சொன்னேன்; கரிக்கடைக்காரனிடமும் சொல்லி வைத்திருந்தேன். பிறகு உன்னை அனுப்பி விட்டுக் குதிரையைத் தட்டிக் கொண்டு போனேன். ரொம்ப தூரம் போய் வேறு ஊருக்கே போய் விட்டேன். என் தவறுக்கு உன் குதிரையே தண்டனை கொடுத்து விட்டுத் தானாகவே உன்னிடம் வந்து சேர்ந்து விட்டது!" என்று கொல்லன் சொன்னான்.

அவனைப் பார்த்ததும் வேலனுக்குப் பரிதாபமாகப் போய் விட்டது. அவன் கை, கால்களிலெல்லாம் பலமான கட்டுகள் போடப்பட்டிருந்தன. வேலன் அவனை மன்னிப்பதைத்தவிர வேறு என்ன செய்ய முடியும்? பிறகு வேலன் எப்போதும் போல் குதிரைமீதேறிப் போக ஆரம்பித்தான்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 322. பகையைக் கணித்தவன் தான் நான்!

முன் கதையைக் கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்:

முதல் நாள் போரில் ராவணன் தோல்வியுற்றான். ராமனது பச்சாத்தாபம் காரணமாக உயிர் பிழைத்து இலங்கை நகரத்துக்கு மீண்டான்.

இரண்டாம் நாள் கும்பகர்ணன் லக்ஷ்மணனால் கொல்லப்பட்டான். மூன்றும் நாள் ராவணனது மகன் அதிகாயன் கொல்லப்பட்டான்.

அதிகாயன் இறந்து போனான் என்பதைக் கேட்ட மாத்திரத்தில் என்றும் இல்லாத பயமும் கோபமும் உண்டாகி ராவணனை திக்பிரமை கொள்ளச் செய்துவிட்டன.

அந்த வேளை அதிகாயனது தாய் தானமாலை தாங்க முடியாத சோகத்தோடு ஓடி வந்து ராவணனது காலில் விழுந்தாள். அந்த சோக வெறியில் ராவணனை நோக்கி "சீதையால் இன்னும் என்ன என்ன விளையப்போகிறதோ" என்று கதறிவிட்டாள்.

பக்கத்திலிருந்த பெண்கள் அப்படியே தானமாலையைக் கைத்தாங்கலாகத் தூக்கி அரண்மனையுள் சேர்த்தார்கள்.

அரண்மனையில் என்றுமில்லாத அழுகுரல் உண்டாகி ஏக்கமும் கதறலும் நகரெங்கும் கேட்கும்படியாய் இருந்தது.

இந்த நிலையில் அயலூரில் இருந்து இலங்கைக்கு வந்தான் இந்திரஜித்து. தன் அரண்மனையில் உட்கார்ந்திருந்தான். பெண்கள் கூடிக் கூடி அழும் குரல் கேட்டது. ராவணனைப் பற்றியே கவலை வந்து விட்டது. "என்ன நடந்தது" என்று பக்கத்தில் இருந்தவர்களைக் கேட்டான். யாருக்கும் பதில் சொல்ல நா எழவில்லை. அதன்மேல் அவனே தேர் ஏறி ராவணன் இருந்த அரண்மனைக்குப் போனான்.

ராவணன் உயிரோடு இருக்கிறான் என்று தெரிந்த மாத்திரத்தில் ஒரு ஆறுதலே உண்டாயிற்று. "ஏன் இந்த அழுகை யெல்லாம்?" என்று ராவணனையே கேட்டான் இந்திரஜித்து.

"அதிகாயன் முதலிய தம்பிமார் இறந்து பட்டார்கள்" என்று ராவணன் சொன்னான். இந்திரஜித்துக்குக் கோபமே வந்துவிட்டது ராவணனிடம். "நீதானே கொன்றாய்?" என்று மிக்க கடுமையாகத் தந்தையைக் கண்டித்துப் பேசினான்.

கண்டித்துப் பேசினாலும் தந்தை துயரத்தில் மூழ்கி இருந்ததைப் பார்த்ததும் இந்திரஜித்தின் மனம் இளகி விட்டது. வீராவேசம் அப்படியே பொங்கி எழுந்தது. "என் தம்பியைக் கொன்ற மனிதரை இதோ கொன்று வருகிறேன்!" என்று எழுந்தான். ராவணனுக்கு மிக்க திருப்தியை உண்டாக்கியது இந்திரஜித்தின் செயல்.

இந்திரஜித்து போர்க் களத்துக்குப் போனான். அவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் பகல் முழுதும் போர் நடந்தது. இந்திரஜித்தின் சேனைகள் எல்லாம் பட்டொழிந்தன. இந்திரஜித்தும் ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டான். இவர்களோடு நேர் யுத்தம் செய்து வெற்றி பெற முடியாது என்ற முடிவுக்கு வந்து நள்ளிரவில் விஷவாயுவைக் கக்குவதான பிரம்மாஸ்திரத்தை எதிரி படைகள் உறங்கிக்கொண்டிருந்த யுத்தகளம் எங்கும் பறந்தோடச் செய்தான்.

விஷவாயு காரணமாக வானர சேனைகள் எல்லாம் உயிர் உணர்ச்சி ஒன்றும் இல்லாது போய் அப்படி அப்படியே கிடந்தன.

லக்ஷ்மணனும் அவர்களைப் போலவே உயிர் உணர்ச்சி ஒன்றும் இல்லாது கிடந்தான்.

யுத்த நிர்வாகம் காரணமாக விபீஷணன் அயல் இடத்துக்குப் போயிருந்தான். களத்துக்கு வந்து பார்த்ததும் சேனைகளும் லக்ஷ்மணனும் இருந்த பரிதாபமான நிலையைப் பார்த்தான். இது இந்திரஜித்தினால் ஏற்பட்ட மாயச் செயல்தான் என்று கண்டு கொண்டான். ஜாம்பவான் சொன்னதின் பேரில் அனுமன் மருந்து மலைக்குப் போய் மூலிகை கொண்டு வந்தான். மூலிகையை உபயோகித்து லக்ஷ்மணனுக்கும் சேனைகளுக்கும் புத்துயிர் உண்டாகி எல்லாரும் எழுந்தார்கள். நேரம் விடிந்து விட்டது. அதே சமயத்தில் ராமன் களத்துக்கு வந்தான்.

அனுமனால் எல்லோரும் பிழைத்தார்கள் என்பது தெரிந்து தன்னுடைய நன்றியை அனுமனுக்கு உள்ளம் உருகிச் சொன்னான்.

இனிக் களத்தை விட்டு விட்டு இந்திரஜித்திடம் போகலாம்.

• • •

பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தாய் விட்டது; எதிரி சேனைகள் எல்லாம் இறந்து ஒழிந்து போய் விட்டன என்ற மனப்பாங்

கில் இந்திரஜித்து தன் அரண்மனைக்குச் சென்று மன அமைதியோடு படுத்துத் தூங்குகிறான்.

விடிந்ததும் ராவணனுக்குச் செய்தி வந்தது. எதிரிகள் சேனைகளோடு யுத்தம் செய்யத் தயாராய் இருக்கிறார்கள் என்பதாக.

“இந்திரஜித்து ஏதோ பகைவர்களை எல்லாம் பாக்கி சாக்கி யில்லாமல் மாய்த்து விட்டதாக இரவில் சொன்னானே! இப்போது அவர்கள் தயாராக இருக்கிறார்கள் யுத்தத்திற்கு என்பது எப்படி இருக்க முடியும்?” என்ற சந்தேகம் உண்டாயிற்று ராவணனுக்கு. இந்திரஜித்தைக் கூப்பிட்டு விட்டான். “பகைவர்கள் எல்லாரும் ஒழிந்தார்கள் என்று சொன்னாயே! இப்போது அவர்கள் யுத்தத்துக்குத் தயாராய் இருக்கிறார்கள் என்று தெரிகிறதே! அதெப்படி இருக்கக் கூடும்?” என்று கேட்டான்.

இந்திரஜித்துக்கும் தெரிய வந்தது; பிரம்மாஸ்திரத்தால் மாய்ந்து போகவில்லை எதிரிகள் என்பது. ஏதோ தந்திரம் செய்து பிழைத்துக் கொண்டார்கள்; தன் மாயம் பலிக்கவில்லை என்பதையும் தெளிவாய்த் தெரிந்து கொண்டான்.

முந்தின நாள் பகல் யுத்தத்தில் எதிரிகளின் அபூர்வமான சக்தி இன்னதென்று கண்டு கொண்டவன்தானே. எதிரிகளை வெல்லுதல் முடியாதென்ற முடிவுக்கு வந்தான். அதன் மேல் தந்தை மீதும் தன் இனத்தார் மீதும் பரிவு உண்டாகிவிட்டது. உண்மையைத் தந்தைக்குச் சொல்லிவிட வேண்டியதுதான் என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு சொல்லுகிறான்.

“எதிரிகள் பலம் அபாரமானது. இது வரையும் நமக்குத் தோல்விதானே கிடைத்தது! ஏதோ என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆத்திரத்தினால் பயந்து சொல்லுகிறேன் என்று எண்ண வேண்டாம்.”

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

ஆதலால் அஞ்சினேன் என்(று)
அருளலை; ஆசைதான் அச்
சீதைபால் விடுதியா யின்
அனையவர் சீற்றந்தீர் வர்;
போதலும் புரிவர்; செய் த
தீமையும் பொறுப்பர்; உன் மேல்க்
காதலால் உரைத்தேன்என் றான்—
உலகெலாம் கலக்கிவென் றான்.

[ஆசைதான் அச் சீதைபால் விடுதியாயின்: சீதை மேலுள்ள ஆசையை விட்டு விடுவாயானால்; அனையவர் சீற்றம் தீர்வர்: அந்த ராம லக்ஷ்மணருக்குக் கோபம் தணியும்;—என் – போதலும் புரிவர்: அப்படியே அயோத்திக்குத் திரும்பி விடுவார்கள்; உலகெலாம் கலக்கி வென்றான்; உலகத்திலுள்ள எதிரிகளை யெல்லாம் முறியடித்து வென்றவனாகிய இந்திரஜித்து — உன் மேல் காதலால் உரைத்தேன் என்றான்.

குறிப்பு:—முந்தின நாள் இந்திரஜித்தின் வீராவேசத்தைப் பார்த்தோம். ஒரு நாள் பட்ட அனுபவத்தால் வீராவேசம் எல்லாம் எப்படி மடங்கி அறிவானது ஒழுங்குக்கு வருகிறது என்பதைப் பார்க்கிறோம்.

* * *

இந்திரஜித்தின் மனசுக்கு லாப நஷ்டம் தெரிய வருகிறது. ஆனாலும் வெறி கொண்ட ராவணனது மனசுக்கோ தெரியவில்லை. வீராவேசம்தான் பொங்கி வருகிறது. பேசுகிறான்: “வாஸ்தவம்; கும்பகர்ணன் முதலிய பல வீரர்கள் இறந்தார்கள். ஆனால் எனக்குத் தெரியும் அவர்கள் இந்தப் பகைவர்களை வென்று தீர்க்க மாட்டார்கள் என்பது. மிஞ்சி நிற்கிறவர்கள் காரியமும் அப்படித்தான் என்பதும் தெரியும் எனக்கு.”

முன்னையோர் இறந்தார்எல் லாம்
இப்பகை முடிப்பர்என் றோ,
பின்னையோர் நின்றார்எல் லாம்
வென்றனர் பெயர்வர்என் றோ,
உன்னைநீ அவரைவெ ன்று
தருதியென்(று) உணர்ந்தும்அன்
[றால் :—
என்னையே நோக்கியான் இந்
நெடும்பகை தேடிக்கொண் டேன்.

[பின்னையோர் நின்றார் எல்லாம்: இப்போது மிஞ்சி நிற்கிற அரக்க வீரர்கள் எல்லாருமே; வென்றனர் பெயர்வர் என்றும்: பகைவர்களை வென்றுவிட்டு வெற்றியுடன் திரும்புவார்கள் என்றும்; உன்னை நீ அவரை வென்று தருதி யென்றும் உணர்ந்தும் அன்றால்: நீ பகைவரை விலங்கு போட்டுக்கொண்டு வருவாய் என்று உன்னைக் கருதியும் அல்ல; என்னையே நோக்கியான் இந் நெடும்பகை தேடிக் கொண்டேன்: நானாகப் பகைவர்களை வலியச் சண்டைக்கு இழுத்தேன்; நான் ஒருவனே அவர்களை வென்று தீர்ப்பேன் என்ற ஒரு உறுதியினால்தான்.]

அதி அற்புதமான செய்யுள். கம்பரது நாடக இயலும் கவி இயலும் ஒன்றாய்க் கலந்து அபூர்வமான தொனியோடு பேசுகின்றன.

இத்தகைய கவி உருவங்களைப் பார்க்கும் போதுதான் அருள் வாக்கென்றால் இன்னதென்று தெரிய வருகிறது.

# யாருக்கு அருமை?



ஸோமால்

**சுந்தரேசன் சொல்லுகிருன் :**

என் தங்கை ஜானகிக்குத்தான் என்னிடம் எத்தனை பிரியம்! பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போது வாசலிலிருந்தே, "அண்ணு, அண்ணு!" என்று அன்போடு அழைத்துக் கொண்டு வருகிருள். பாவம், அப்பா இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அவர் காலமானபோது ஜானகி மூன்று வயதுக் குழந்தை. அப்பொழுது தங்கத்தில் உருக்கி வார்த்ததுபோல் இருப்பாள். இப்பொழுது வயது வளர வளர அவளது அழகும் வளர்ந்துகொண்டே வருகிறது. அவளை நன்ருய்ப் படிக்க வைக்க வேண்டும்.

பள்ளிக்கூடத்தில்கூட ஜானகிக்கு அண்ணுவின் ஞாபகம்தானும். அன்றைக்கு அவள் வகுப்பு உபாத்தியாயர் சொன்னுர்.

அப்பா கடைசியாகச் சொன்ன வார்த்தையை நிறைவேற்ற வேண்டும். "குழந்தை ஜானகியைக் கண் கலங்காமல் பார்த்துக் கொள். அவளை நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்துகொடு!" என்று அப்பா எவ்வளவு நெஞ்சுருகிச் சொன்னுர்!

அப்பாவின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பது எனக்கு ஒன்றும் சிரமமில்லை. அவர்தான் வேண்டிய பணம் வைத்துவிட்டுப் போயிருக்கிருரே! அவள் நன்ருய்ப் படிக்கட்டும். பாட்டு சொல்லிக் கொள்ளட்டும். கல்யாணத்தை ஆற அமர யோசித்துச் செய்ய வேண்டும். அவளுக்கு ஏற்ற வரன் கிடைக்க வேண்டுமே!

நான் பி. ஏ. பாஸ் செய்ததும் வேலை கிடைத்து விட்டது. அம்மாவின் தொந்தரவு இப்போதெல்லாம் ரொம்ப அதிகமாகி விட்டது.

"நான் எத்தனை நாளைக்கு இப்படியே இருப்பேன்! நான் கண்ணை மூடுவதற்குள் உனக்குக் கல்யாணத்தைச் செய்து விட்டால் என் பொறுப்பை அவள் ஏற்றுக் கொண்டு விடுவாள். அப்புறம் நீங்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து ஜானகியின் கல்யாணத்தை 'ஜாம், ஜாம்' என்று நடத்தி வைத்து விடுவீர்கள்!" என்று ஓயாமல் சொல்லிக் கொண்டேயிருக்கிருள்.

எனக்குக் கல்யாணம்செய்து கொள்ள விருப்பமில்லை. அதற்குக் காரணம், எனக்கு மனைவியாக வருகிறவள் ஜானகியிடம் அன்பாயிருக்க வேண்டுமே, அவள் முகம் கோணுமல் நடந்து கொள்ள வேண்டுமே என்னும் கவலைதான் எனக்கு.

ஆனுல் அம்மா எனக்குப் பெண் தேடும் முயற்சியைத் தொடங்கிவிட்டாள். அம்மாவின் மனம் புண்ணுகும்படி நான் நடந்து கொள்ள முடியாது. எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. ஜானகிக்கு என்ன தெரியும்! கள்ளங் கபடம் அற்ற அவள் இன்னும் குழந்தையாகவே யிருக்கிருள். வயது பன்னிரண்டாகியும் அவளுக்கு இன்னும் விவரமே தெரியவில்லை.

"அண்ணு, மன்னி எப்போது வருவாள்!" என்று அடிக்கடி குதூகலத்தோடு கேட்டு என்னை நச்சரிக்கிருள். ஆனுல் தனக்கு மன்னியாக வருகிறவள் ஒரு சத்துருவாகத்தான் இருப்பாள் என்பது ஜானகிக்கு எப்படித் தெரியும்!

என்னைப் பொறுத்தவரையில் விவாகம் செய்து கொள்ளுவதில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. ஜானகியின் வருங்கால வாழ்க்கை நலனை உத்தேசித்து நான் விவாகம் செய்து கொள்ளக்கூடாது. ஆனுல் அம்மா விட மாட்டாள் போலிருக்கிறதே!

**ஜானகி சொல்லுகிருள் :**

அண்ணுவுக்குத்தான் என்னிடம் எவ்வளவு பிரியம்! என்னுடைய முகம் கொஞ்சம் வாடியிருந்தால் போதும், அண்ணு துடித்துப் போய் விடுவார். அண்ணு முகமலர்ந்து ஒரு வார்த்தை பேச வில்லையென்ருல் எனக்கு அன்றைக்கு முழுவதும் என்னவோ போல் இருக்கிறது.

அப்பாவை நான் பார்த்ததில்லை. அவர் இறந்தபோது நான் மூன்று வயதுக் குழந்தையாம். அப்பொழுதிலிருந்து அண்ணுதான் என்னை மிகவும் அன்போடு வளர்த்து வருகிருர். இதுவரையில் எனக்கு ஒரு குறை வைத்ததில்லை.

அன்றைக்கு நான் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் அண்ணுவிடம் ஓடினேன்.

"அண்ணு, அண்ணு! புதுமாதிரியில் அகலமான ரிப்பன் ஒன்று வந்திருக்கிறது. நேற்றைக்கு என் தோழி சரோஜா தலையில் வைத்துப் பின்னிக் கொண்டு வந்தாள்....!" என்று மூச்சு இறைக்கச் சொன்னேன்.



"எந்த மாதிரி ரிப்பன்!" என்று கேட்டார் அண்ணு.

"சாக்லேட் கலரில் அகலமான வெல்வெட் ரிப்பன், அண்ணு!" என்றேன்.

அடுத்த நிமிஷம் அண்ணு தன் அறைக்குச் சென்று திரும்பி வந்தார்.

"இந்தா, ஜானகி! இந்த ரிப்பன்தானே நீ கேட்டது!" என்று கேட்டுக் கொண்டே

அண்ணா என் கையில் ரிப்பனைக் கொடுத்தார். எனக்குச் சந்தோஷம் தாங்கவில்லை.

"அண்ணா, உங்களுக்கு எப்படித் தெரிந்தது! முன்னாலேயே எப்படி எனக்குப் பிடித்த இந்த ரிப்பனை வாங்கி வைத்திருந்தீர்கள்!" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"ஜானகி, என்ன அப்படிக் கேட்கிறாய்! நீ என்ன கேட்பாய், உனக்கு என்ன பிடிக்கும் என்பதெல்லாம் உன்னைவிட எனக்கு நன்றாய்த் தெரியும்!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார். அண்ணாவுக்குத்தான் என் மேல் எவ்வளவு பிரியம்!

அம்மா எவ்வளவோ சொல்லியும் அண்ணா கேட்காமல் பிடிவாதம் பிடித்து வந்தார். ஆமாம், அவருடைய கல்யாண விஷயத்தில் தான் அவ்வளவு பிடிவாதம். கடைசியில் அம்மா தான் ஜயித்தாள். பத்மா எனக்கு மன்னியாக வந்து சேர்ந்தாள். என் மன்னி பெரிய இடத்தைச் சேர்ந்தவள். நல்ல அழகு. புத்திசாலி. என்னிடம் என் மன்னிக்கு எவ்வளவு பிரியம்!

## சுந்தரேசன் சொல்லுகிறான்:

அம்மாவின் வார்த்தையைத் தட்ட முடியாமல் நான் கல்யாணம் செய்து கொள்ளும்படியாகி விட்டது. பத்மாவை நான் மணந்து கொண்டதனால் வீட்டில் ஜானகியின் அந்தஸ்து குறைந்து விட்டது என்று நினைத்தேன். இரவும் பகலும் என் மனம் இதே நினைவில் வேதனைப் பட்டு உழல ஆரம்பித்தது. பத்மா ஜானகியிடம் எவ்வளவோ அன்பு பாராட்டினாள்; அவள் உயிருக்கு உயிராக இருந்தாள்; தலை வாரிப் பின்னினாள்; பொட்டிட்டு அழகு பார்த்தாள்; பூ வைத்துப் பூரித்தாள்; அவளுக்குப் புதுப்புடவை கட்டித் தான் மனம் மகிழ்ந்தாள். இந்த விதமாக பத்மாவுக்கு ஜானகியைக் கவனிப்பதற்கே பொழுதுக்கும் சரியாயிருந்தது.



ஆனால் இவை யெல்லாம் என் மனத்தில் எந்த விதமான மாறுதலையும் உண்டாக்கவில்லை. என்னைப் பொறுத்த வரையில் பத்மா வேற்றுப் பெண்ணாகவே தோன்றினாள். அவள் ஜானகியிடம் கொண்டிருந்த அபரிமிதமான அன்பை என்னால் உணர முடியவில்லை. அவள் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் நான் தவறாகவே உணர்ந்து கொண்டேன். ஆனால் அதன் காரணமாக அவளிடம் ஒன்றும் பேசவில்லை. கடுமையாகவும் நடந்து கொள்ளவில்லை. ஆனால் ஒரு முடிவுக்கு மட்டும் வந்து விட்டேன். ஜானகிக்குச் சீக்கிரம் கல்யாணம் செய்து வைத்து அவளைப் புக்ககத்துக்கு அனுப்பி விட்டால், அவள் தன்னுடைய மன்னி பத்மாவின் கொடுமைகளிலிருந்து தப்பி விடுவாள் அல்லவா!

"மன்னி, பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டும். இன்றைக்கு நான் எண்ணெய் தேய்த்துக் கொள்ள முடியாது!" என்று கண்டிப்பாகக் கூறுவாள், ஜானகி.

அதற்குப் பத்மா, "என்ன, எண்ணெய் தேய்த்துக் கொள்ள முடியாதா! தேய்த்துக் கொள்ளா விட்டால் உன்னை யார் விடுகிறார்கள்! நீ என் சொற்படிதான் கேட்க வேண்டும்!" என்று கண்டிப்பான குரலில் கூறி ஜானகியை எண்ணெய் தேய்த்துக் கொள்ளச் சொல்லி வற்புறுத்துவாள்.

"மன்னி, ஜலதோஷம் சரியாய்ப் போய் விட்டது. இனிமேல் பச்சை ஜலத்தில் குளித்தால் என்ன!" என்பாள் ஜானகி.

"அதெல்லாம் முடியாது. நீ வெந்நீரில்தான் குளிக்கவேண்டும். உடம்புக்கு ஏதாவது வந்து விட்டால் என்ன செய்வது!" என்பாள் பத்மா.

"என்ன அலங்காரம் வேண்டிக் கிடக்கிறது, மன்னி! இன்றைக்கு இந்தச் சாதாரண 'வாயில்' சிற்றாடை போதாதா!" என்று தயங்கியபடி கேட்பாள் ஜானகி.

"ரொம்ப அழகாயிருக்கிறது! 'வாயில்' சிற்றாடை வீட்டில் இருக்கும்போதுதான் கட்டிக் கொள்ள வேண்டும். அந்த ஸில்க் சிற்றாடையை எடுத்து வைத்திருக்கிறேன். கட்டிக்கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போ!" என்று பத்மா அதிகார தோரணையில் உத்தரவு போடுவாள். ஜானகி அவளுக்குக் கீழ்ப்படிந்து போவாள்.

இந்த மாதிரி எத்தனையோ சம்பவங்கள். இதை யெல்லாம் பார்க்கும்போது நான் வேதனைப் படுவேன். 'ஐயோ, அம்மா! என்ன, கொடுமை! என்ன வற்புறுத்தல்! ஜானகிக்கு இதிலிருந்து விடுதலையே கிடையாதா!' என்று மனக்குள் புழுங்குவேன்.

இதைப் பற்றிப் பத்மாவிடம் ஒரு வார்த்தை கூட நான் பேசியதில்லை. அப்படி ஏதாவது அது விஷயமாகப் பேசினால் அது ஜானகிக்கும் அவளுக்கும் இடையே பெரிய மன வேற்றுமையை உண்டு பண்ணி விடுமோ என்று பயந்தேன். கடைசியாக, ஜானகிக்கு ஒரு வரனைத் தேடிப் பிடித்து விவாகம் செய்து அவளைப் புருஷன் வீட்டுக்கு அனுப்பிவிட்டால், என் கவலை யெல்லாம் தீர்ந்து விடும், அவளுக்கும் நிம்மதி ஏற்படும் என்ற முடிவுக்கு வந்தேன்.

என் விடா முயற்சி வீண் போகவில்லை. ஜானகிக்கு நல்ல வரனாக ஒருவன் வந்து வாய்த்தான். என் ஆனந்தத்துக்குக் கேட்க வேண்டுமா! பிரமாதமாக ஜானகியின் விவாகத்தைச் செய்து முடித்தேன். ஜானகிக்கும் இந்த விவாகத்தில் பரம திருப்தி. புன் சிரிப்போடு மணமேடையில் அமர்ந்து ஜானகி தன் கணவனைப் பார்த்த கடைக்கண் பார்வை யிருக்கிறதே! அடாடா! அது அவள் மனத்திருப்தியைத் தெளிவாகக் காட்டி விட்டது.

ஜானகியின் கல்யாணத்தில் மிகவும் உற்சாகத்தோடு பங்கெடுத்துக் கொண்டு ஓய்வு ஒழிவு இல்லாமல் கல்யாண காரியத்தைக் கவனித்துக் கொண்டவள் என் மனைவி பத்மாதான். அவள் இல்லை யென்றால் கல்யாணமே இல்லை என்றுதான் கூற வேண்டும். பின்னை வீட்டாருக்கும் பத்மாவிடம்தான் ரொம்ப சந்தோஷம்.

இன்னும் ஒரு வாரத்தில் ஜானகியைப் புக்ககத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும். இது அவர்கள் விருப்பம் என்று கூறினால் போதாது. உண்மை

யில் நானே அதற்குக் காரணம் என்று கூறினால் தவறாகாது. பத்மாவிடம் நான் கொண்டிருந்த தவறான அபிப்பிராயம் என்னை ஞானகியைச் சீக்கிரம் புக்ககத்துக்கு அனுப்பும்படி தூண்டியது. ஞானகி தன் மன்னியை விட்டுப் பிரியக் கொஞ்சத்தில் சம்மதிக்கவில்லை. என்னையும் அம்மாவையும் விட்டுப் பிரிவதில் கூட அவள் அவ்வளவு மனம் வருந்தவில்லை. மன்னியிடம் தான் அவள் உயிரையே வைத்திருந்தாள்.

## பத்மா சொல்லுகிறாள் :

என் நாத்தனார் ஞானகிக்கு விவாகம் ஆகிவிட்டது. ஸ்வர்ண விக்கிரகம் போல் இருக்கும் அவளுக்குக் கல்யாணம் ஆகாமல் போய்விடுமா? எதற்காக இவர் அவசரப்பட வேண்டும்! இல்லை, வரதக்ஷிணைக்கும் சீர் செனத்திக்கும் பணம் இல்லாமல் போய்விட்டதா! அதற்கும்தான் ஒரு குறையும் இல்லையே!

ஞானகி ஹைஸ்கூல் படிப்பை முடித்ததும் அவளுக்கு விவாகம் செய்துவிட வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றாரே!

"அண்ணா, இன்னும் மேலே படிக்க எனக்கு ஆசையாயிருக்கிறது! நான் படிக்கிறேன்!" என்று எவ்வளவு ஆவலோடு கெஞ்சிக் கேட்டாள் ஞானகி! அதற்கு இவர் கொஞ்சம் கூடச் செவி சாய்க்கவில்லையே! என்ன கல் நெஞ்சு!

"ஞானகியை ஒரு நல்ல இடமாகப் பார்த்துக் கொடுத்து விட்டேனானால் என் கவலை தீர்ந்துவிடும்!" என்று அவர் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்.



ஆனால் ஞானகிக்கு நல்ல கணவன் கிடைத்துவிட்டான். அழகும் இளமையும் செல்வமும் சேர்ந்து அவனுக்கு ஒரு தனிக் கவர்ச்சியைத் தருகிறது. ஞானகிக்கு ஏற்றவன்தான்.

ஞானகிக்கு விவாகம் ஆகும் வரையில் அவர் முகம் மிகவும் வாட்டமுற்றிருந்தது. இப்பொழுது தான் விவாகமாகி விட்டதே! இனிமேல் அவருக்கு என்ன கவலை! இன்னமும் அவர் முகம் வாடித்தான் இருக்கிறது. எனக்கும் ஞானகியின் நினைவாகவே இருக்கிறது.

"ஞானகிக்குக் கல்யாணம் செய்து வைத்து விட்டால் என் கவலை எல்லாம் தீர்ந்தது. அப்புறம் நிம்மதியாயிருப்பேன்!" என்று நான் அவரைக் கைப் பிடித்ததிலிருந்து எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறார். ஆனால் ஞானகிக்குக் கல்யாணமான பிறகுதான் அவர் அதிகமாகக் கவலைப் படுவதாகத் தெரிகிறது. ஒருவேளை அருமைத் தங்கையைப் பிரிந்திருப்பதனால் மன வேதனைப் படுகிறாரோ என்று நினைத்தேன்.

அன்றைக்குத்தான் அவர் கவலைப்படுவதன் உண்மையான காரணம் தெரிய வந்தது. அத்துடன், நான் அவரைத் துளிக்கூடப் புரிந்து கொள்ளாத அசடாகவே இருந்து விட்டேனே என்ற வருத்தமும் ஏற்பட்டது.

என்மேலுள்ள அவநம்பிக்கையினால் அல்லவா, அவர் தம் தங்கையின் விவாகத்துக்கு அவ்வளவு அவசரப் பட்டிருக்கிறார்! நான் அவளைச் சரியாகப் பராமரிக்க மாட்டேனாம். அந்தக் கஷ்டத்துக்காகத்தான் அவளைச் சீக்கிரமாக விவாகம் செய்து கொடுத்து விட்டாராம். இந்தக் கொடுமையான செய்தியை அவரே என்னிடம் சொல்லி விட்டார்.

என் மனம் இதை அறிந்ததும் அனலில் இட்ட புழுவாகத் துடித்தது. இத்தனை நாள் வரையில் இது விஷயமாகச் சந்தேகமே எழுந்ததில்லை. அவ்வளவு அசடாக இருந்திருக்கிறேன்!

ஆனால் இப்பொழுது நான் அதைப்பற்றி வருத்தப்படவில்லை. என் கணவர் என் மனசைப் புரிந்து கொண்டு விட்டார்! எனக்கும் அவர் மனசு நன்றாய்ப் புரிந்து விட்டது.

"ஞானகிக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் அப்புறம் நான் நிம்மதியாயிருப்பேன்! என்று சொல்லிக் கொண்டே இருந்தீர்களே! இப்பொழுது உங்கள் மனம் நிம்மதியடைந்ததாகத் தெரியவில்லையே! மனசுக்குள் எதையோ நினைத்துப் புழுங்குகிறீர்கள். தங்கை ஞானகியைப் பற்றிய நினைவா!" என்று கேட்டேன்.

அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா!

"பத்மா, உன்னை நான் அறிந்து கொள்ளாமலே பழகி வந்திருக்கிறேன். இப்பொழுதுதான் எனக்கு உன்னுடைய உண்மைச் சுபாவம் விளங்குகிறது. நீ இருக்கும்போது நான் ஞானகியைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்!" ஆனால் நான் வருந்துவதெல்லாம், உனக்கு இழைத்த மனக் கஷ்டத்தை நினைத்துத்தான். உன் உள்ளப் பண்பை உணராமல் ஞானகியிடம் நான்தான் அதிகப் பிரியம் உள்ளவனாக நினைத்துக் கொண்டு உனக்கும் அவளுக்கும் இடையில் அர்த்தமில்லாமல் வேற்றுமை கற்பித்துத் தவித்தேனே! அதை நினைத்துத்தான் என் மனம் வருந்துகிறது. என்னை மன்னித்துவிடு!" என்றார்.

"நான் எதற்காக உங்களை மன்னிப்பது! இப்படியெல்லாம் பேசினால் நிஜமாகவே எனக்குக் கோபம் வந்துவிடும். ஞானகியைப் பற்றி நினைக்கவில்லை என்று சொல்லுகிறீர்களே! அவளை நினைக்காமல்தான் ஒரு நாளைக்குப் பன்னிரண்டு தடவை 'ஞானகி! ஞானகி!' என்று அழைக்கிறீர்களோ!" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "பத்மா, அதெல்லாம் உண்மை தான். இருந்தாலும் நீ ஞானகியிடம் வைத்திருக்கும் அன்புக்கு என் அன்பு ஈடாகாது. நான்தான் இராத்திரியெல்லாம் உட்கார்ந்து என் தங்கைக்குக் கடிதம் எழுதுகிறேனா! புக்ககத்தில் இருக்கும் அவளை நினைத்து நான்தான் புடவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொள்ளுகிறேனா! இலையில் சாதத்தை வைத்துக் கொண்டு சாப்பிடாமல் நான்தான் பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்து தவிக்கிறேனா! கூப்பிடக் கூப்பிடக் காது கேளாமல் எங்கேயோ நினைவாக இருக்கிறேனா!" என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

என் மனத்தில் இப்பொழுதுதான் அமைதி ஏற்பட்டது. அவர் அழகான முகமும் வாட்டமற்று அமைதியோடு விளங்கியது.

# படித்துப் பாருங்கள்!

## Asthma—A cure without Drugs

மேனாட்டு வைத்திய நிபுணர்கள் எத்தனையோ நோய்களுக்கு அற்புதமான மருந்துகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஸல்பா மருந்துகள் என்ன, பெனிஸிலின் மருந்துகள் என்ன! இப்படிப் பல வகையான கைகண்ட ஔஷதங்களைக் கண்டு பிடித் திருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஆராய்ச்சியாளர்களையும் ஏமாற்றி வரும் நோய் ஒன்று உண்டென்றால் அது ஆஸ்த்மா நோய்தான்.

மேல்நாட்டு வைத்தியம் கைவிட்டாலும் பாரத நாட்டு யோக சிகிச்சை கைகண்ட பலன் அளிக்கிறது என்கிறார் இந்தப் புஸ்தகத்தின் ஆசிரியர். இவர் யார்! மேல்நாட்டு வைத்திய முறைகளில் முறையான பயிற்சி பெற்ற எல். ஆர். ஸி. பி., எம். ஆர். ஸி. எஸ். என்னும் பெரிய பட்டங்களைப் பெற்ற டாக்டர் டி. செல்லைநாதன் அவர்கள்தான்.

இப்புஸ்தகத்தின் முதலிரு அத்தியாயங்களில் ஆஸ்த்மா நோயின் தன்மையை விளக்கி விட்டு, மூச்சு உள்ளுக்கு இழுத்து வெளியில் விடும் பயிற்சிகள் சிலவற்றின் மூலமும், சௌளி, சர்வாங்காசனம், சிரசாசனம், மத்ச்யாசனம் முதலிய ஒரு சில யோகாசனங்கள் செய்து வருவதினாலும் ஆஸ்த்மா நோயிலிருந்து விடுபடலாம் என்று கூறுகிறார். மேலும் ஆகார விஷயத்திலும் சற்று கவனம் செலுத்தி சத்துள்ள ஆகாரத்தைச் சரியான இடை வெளி விட்டு உண்டு வந்தால் வேறு பல நோய்களிலிருந்தும் தப்பலாம் என்கிறார்.

இதன் ஆசிரியர் மேல்நாட்டு வைத்திய சாஸ்திரத்தில் சிறந்த அறிஞராக இருப்பதால் இந்த யோகாசன முறைகளிலுள்ள குண நலன்களை மேல்நாட்டு வைத்தியத்தில் பயிற்சி யுள்ளவர்களுக்கும் புரியும்படி அவர்கள் பரிபாஷையிலும் ஆங்காங்கே விளக்கி யிருக்கிறார். மொத்தத்தில் டாக்டர்களுக்கும் பொது ஜனங்களுக்கும் பயன்படும் வகையில் எளிய ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ள இந்நூலுக்கு நல்ல வரவேற்பு இருக்கும் என்று நம்புகிறோம்.

கிடைக்குமிடம்: T. செல்லைநாதன், L.R.C.P. (Lond) M. R. C. S. (Eng). The Govt. Hospital Indigenous Medicine. Colombo. விலை: ரூ. 9.50. இந்தியாவில் கிடைக்குமிடம்: திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி, 32, 4-வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை. தபால் செலவு உள்பட ரூ. 10.

## கீர்த்தனை மஞ்சரி

இனிய தமிழில் பாடி இசைக் கலையை வளர்க்கும் இணையற்ற தொண்டில் ஸ்ரீ பெ. தூரன் அவர்களுக்கு முதன்மை ஸ்தானம் அளிக்க வேண்டும். ஏற்கெனவே, அவர் இயற்றியுள்ள தமிழ்க் கீர்த்தனைத் தொகுதிகள் பல வெளி வந்துள்ளன.

இந்தத் தொகுதியில் நாற்பது உருப்படிகள் இசை வகுக்கப்பட்டு சுரதாளக் குறிப்புகளுடன் வெளியிடப் பட்டிருக்கின்றன.

மேற்படி கீர்த்தனைகளுக்கு, இசை வகுத்து, சுரதாளங்கள் அமைத்துப் பெரிதும் உதவி புரிந்தவர் இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் என்பது பாராட்டுக் குரிய விஷயம்.

இந்நூலில் ஆசிரியர், பிறை சூடிய பெருமானையும், ஆதி பராசக்தியையும், தமிழ்க் கடவுளான முருகப் பெருமானையும், பாற்கடலிற் பள்ளி கொண்ட பரந்தாமனையும் ஊனும் உள்ளமும் உருகிப் பாடியிருக்கிறார்.

"அத்தனே அரனே அம்பிகை பாகனே
முத்தி அளித்திடுவோர் முதல்வா மூர்த்தியே!"

என்று சிவ பெருமானை அழைக்கும் ஆசிரியர் வேற்றுமை ஒரு சிறிதும் இன்றி,

"ஆதிமூலமே கோபாலா அருநான் மறை மூலா
அடியார்க் கின்தருள் செய்திடும் அரி மாதவ மாயா!"

என்று பரந்தாமனையும் பாடிப் பரவுகிறார்.

இந்நூலுக்கு ஆசிரியர் கல்கி அளித்திருக்கும் முன்னுரையில்,

"பழமையைத்தான் கையாளுவோம், புதியதைத் தொடவே மாட்டோம் என்றால், கலைகள் காலத்துக்கேற்ப வளர்ச்சி அடைவதுதான் எப்படி! அவ்வப்போது புதிய தண்ணீர் பாயாத குளத்தைப் போலக் கலையும் தேக்க மடைந்து வற்றிப் போய் விடக்கூடும்.

"ஆகையால், புதிய சாஹித்யங்கள் வர வேண்டியதுதான். ஆனால் அவை பழமையை ஒட்டி அமைந்திருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். இன்றியமையாத பண்புகள் பொருந்தி இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும்.

"ஸ்ரீ தூரனின் சாஹித்தியங்களில் உயர்தர சங்கீதத்துக்குரிய சிறந்த பண்புகள் எல்லாம் அமைந் திருக்கின்றன......" என்று கூறி யிருக்கிறார். பிரசுரம்: தமிழ் இசைச் சங்கம், சென்னை; விலை, ரூ. 3—0—0.



வேலைக்காரன்:—ஐயா, வேலையை விட்டுத்தான் போகச் சொல்லி விட்டீர்கள். என்னைப் பற்றி ஒரு கடுதாசியாவது எழுதிக் கொடுங்கள். அதை வைத்துக் கொண்டு பிழைப்புக்கு வழி தேடிக் கொள்ளுகிறேன்.

எஜமான் (டாக்டர்):—'இவனுக்கு நல்ல பசி எடுக்கிறது. நன்றாய்த் தூங்குகிறான்!' என்று எழுதிக் கொடுக்கட்டுமா?

# முக்கிய கேந்திரம்

ச. ஜெயமணி ஏ. ஏ.

## எகிப்து—8

லார்ட் லாயிட் பதவியிலிருந்து விலகியது புவாட் மன்னருக்கு வலது கை முறிந்தது போலாயிற்று. அதன் பிறகு அவர் தம்முடைய சர்வாதிகாரத்தை அமுல் நடத்த முடியவில்லை. எனவே மறுபடியும் பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடத்துவதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை.

1928-ம் வருஷக் கடைசியில் நடந்த அந்தத் தேர்தலிலும் வப்துக் கட்சியினர் அநேகமாக எல்லா ஸ்தானங்களையும் கைப்பற்றி விட்டார்கள்.

வப்துக் கட்சியின் பலத்தையும் செல்வாக்கையும் அறிந்த பிரிட்டிஷ் தொழிற் கட்சி சர்க்கார் எகிப்துடன் சமரசப் பேச்சை ஆரம்பிக்கத் தீர்மானித்தார்கள். அதற்கிணங்க பிரதம மந்திரி நஹாஸ் பாஷா லண்டனுக்குச் சென்றார்.

அப்போது எகிப்தின் பல கோரிக்கைகளையும் பிரிட்டிஷ் சர்க்கார் அங்கீகரித்தனர். அவ்விஷயத்தில் கன்சர்வேடிவ் கட்சி சர்க்காரைக் காட்டிலும் தொழிற் கட்சி சர்க்கார் முன் சென்றார்கள். எனினும் சூடான் விஷயம் அப்போதும் சமரசம் ஏற்படுவதற்கு முட்டுக்கட்டையாக அமைந்தது. அந்தப் பிரச்னை தீராததால் பேச்சு வார்த்தைகள் முறிந்து நஹாஸ் பாஷா ஏமாற்றம் அடைந்து வெறும் கையுடன் எகிப்துக்குத் திரும்ப நேர்ந்தது.

பிரிட்டிஷ் சர்க்காருக்கும் நஹாஸ் பாஷாவுக்கும் ஒப்பந்தம் ஏற்படாதது புவாட் மன்னர் கோஷ்டியினருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனெனில் தங்கள் சர்வாதிகாரத்தைச் செலுத்துவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்து விட்டது அல்லவா?

நஹாஸ் பாஷா லண்டனிலிருந்து திரும்பி வந்தபின் பார்லிமெண்டுக்கும் புவாட் மன்னருக்கும் மீண்டும் தகராறு ஏற்பட்டதால் அவர் பிரதம மந்திரி பதவியை ராஜிநாமா செய்தார்.

மறுபடியும் மூன்றாவது தடவையாக புவாட் மன்னரின் சர்வாதிகார ஆட்சி ஆரம்பமாயிற்று. பார்லிமெண்டு கலைக்கப்பட்டது. வப்துக் கட்சிப் பத்திரிகைகள் நிறுத்தப்பட்டன. இந்தத் தடவை புவாட் மன்னரின் ஆட்சி முறை மிகக் கொடுமையாக இருந்ததால், பார்லிமெண்டு அங்கத்தினர்கள் அவரது கட்டளையை மீறிக் கூட்டம் கூடினார்கள். தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்து எகிப்து அரசியல் சாஸனத்தைக் காப்பாற்றுவதாகப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள்.

பார்லிமெண்டு அங்கத்தினர்களை ஆதரித்து நாடு முழுதும் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. அவற்றைத் துருப்புகள் கலைக்க முற்பட்டதால் ஜனங்களின் உதிரம் சிந்தியது. ஓரிடத்தில் நடந்த கூட்டத்தில் நஹாஸ் பாஷாவும் காயமடைந்தார்.

பிரிட்டிஷ் அதிகாரிகளின் தலைமையில் துருப்புகளும் போலீசாரும் எகிப்து மக்களின் உதிரத்தைச் சிந்தியதால் நாடு முழுதும் மிகுந்த ஆத்திரம் ஏற்பட்டது. வப்துக் கட்சியை ஆதரிக்க விரும்பாத மிதவாதிகள் கூட எகிப்து மன்னரின் அடக்குமுறைகளைக் கண்டிக்க முற்பட்டார்கள்.

யார் கண்டித்து என்ன பலன்? 1930-ம் வருஷத்திலிருந்து எகிப்தில் சர்வாதிகார ஆட்சி நிரந்தரமாகியது. 'சுதந்திர' எகிப்து உண்மையில் பிரிட்டிஷ் காலனிகளில் ஒன்றாக இருக்க நேர்ந்தது. கெய்ரோ, அலெக்ஸாண்டிரியா முதலிய முக்கிய நகரங்களில் பிரிட்டிஷ் துருப்புகள் வைக்கப்பட்டன. சூயஸ் கால்வாயும் சூடான் பிரதேசமும் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் இருந்தன.

போதாக் குறைக்கு அப்போது உலகம் முழுதும் ஏற்பட்ட பொருளாதார மந்தம் எகிப்தையும் வாட்டியது. பஞ்சின் விலை விழுந்து விட்டதால் எகிப்தின் பொருளாதார நிலைமை படுமோசமாகியது.

இந்த நிலைமையில் 1935-ம் ஆண்டில் எகிப்தை மற்றொரு புதிய ஆபத்து எதிர்நோக்கி நின்றது. அடுத்துள்ள அபிஸினியா தேசத்தின் மீது இத்தாலி படையெடுத்து அதைக் கைப்பற்றியதே புதிய ஆபத்தாகும்.

அதனால் எகிப்தில் தங்களுடைய நலன்களுக்கும் ஆபத்து நேரக் கூடும் என்பதைப் பிரிட்டிஷார் உணர்ந்தனர். எனவே மேற்படி ஆபத்தைத் தவிர்ப்பதற்காக அவர்கள் எகிப்து மக்களின் உறவை நாட முற்பட்டார்கள். மேலே குறிப்பிட்ட பொதுவான ஆபத்து எகிப்தியர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் நட்பை உண்டாக்கியது. அப்போது எகிப்துப் பார்லிமெண்டுக்கு நடந்த தேர்தலில் மீண்டும் வப்துக் கட்சியினரே எல்லா ஸ்தானங்களிலும் வெற்றி பெற்றார்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.



முஸ்தபா நஹாஸ் பாஷா

அதன் பயனாக, 1936-ம் ஆண்டில் எகிப்துக்கும் பிரிட்டனுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டது. பொதுவான ஆபத்தை உணர்ந்து இருசாராரும் பரஸ்பரம் விட்டுக் கொடுத்தனர். சூடான் விஷயத்தில் உறுதியுடன் இருந்து வந்த எகிப்தியத் தலைவர்கள் சூடானில் பிரிட்டிஷாரின் உரிமையை அங்கீகரித்தார்கள். சூயஸ் கால்வாயைப் பாதுகாக்கும் பொறுப்பையும் பிரிட்டிஷார் மேற்கொள்ள இசைந்தார்கள்.

அதற்குப் பதிலாக பிரிட்டிஷ் சர்க்கார் கெய்ரோ, அலெக்ஸாண்டிரியா முதலிய இடங்களிலுள்ள தங்கள் துருப்புகளை வாபஸ் செய்து கொள்ள இசைந்தனர். சர்வ தேச சங்கத்தில் சேர எகிப்துக்கு ஆதரவு அளிப்பதாயும் பிரிட்டிஷ் சர்க்கார் உறுதி கூறினர்.

மேற்படி 1936-ம் வருஷத்திய உடன்படிக்கையைத் தான் இப்போது ரத்து செய்யப் போவதாக எகிப்து சர்க்கார் அறிவித்திருக்கிறார்கள் என்பது இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடத் தக்கது.

அந்த உடன்படிக்கை, வெளி நாட்டுக் கொள்கையில் இங்கிலாந்துக்கும் எகிப்துக்கும் தொடர்பு இருக்க வேண்டும் என்று வற்புறுத்தியது.

* * *

வெகு காலமாக இரண்டு நாடுகளுக்கும் இருந்துவந்த தகராறு ஒரு வழியாகத் தீர்ந்ததைக் குறித்து எகிப்து மக்கள் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தனர். ஆனால் அது அற்ப சந்தோஷமாக முடியும் என்று அப்போது அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

இங்கிலாந்து - எகிப்து உடன்படிக்கை ஏற்பட்ட பிறகும்கூட எகிப்து மன்னர் குடும்பத்துக்கும் வப்துக் கட்சிக்கும் இருந்த தகராறு வாழையடி வாழையாகத் தொடரலாயிற்று! வப்துக் கட்சிக்கு விரோதமாகச் சூழ்ச்சிகள் நடப்பது நிற்கவில்லை. திரை மறைவில் பிரிட்டிஷார் மன்னருக்கு ஆதரவு அளிப்பதையும் நிறுத்தவில்லை.

இவற்றைத் தவிர எகிப்து மக்கள் மற்றொரு பெரிய அநீதிக்கும் உட்பட வேண்டியிருந்தது. அதாவது எகிப்தில் உள்ள நிலங்களில் பெரும்பகுதியும் மன்னர் குடும்பத்தினருக்கும் மற்றும் ஒரு சிலருக்கும் சொந்தமாக இருந்தன. அவர்கள் எகிப்தின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாக இருந்தார்கள். அந்த நாட்டில் உண்மையான ஜனநாயகம் ஏற்படுவதை அவர்கள் விரும்பவில்லை. எகிப்து சர்க்கார் நிர்வாகத்தில் எகிப்து மக்களுக்குப் பங்கு அளிப்பதற்குப் பிரிட்டிஷ் சர்க்கார் இசைந்தாலும் மன்னர் கோஷ்டியைச் சேர்ந்த பிற்போக்காளர்கள் இணங்கத் தயாராக இல்லை!

எனவே இதற்கு முன் எகிப்தில் பல தடவை நடந்த அரசியல் நாடகம் மீண்டும் நடைபெற்றது. மன்னர் நஹாஸ் பாஷாவை 'டிஸ்மிஸ்' செய்து விட்டுப் பார்லிமெண்டைக் கலைத்தார்.

வழக்கம்போல் சிறிதுகாலம் மன்னரின் சர்வாதிகார ஆட்சி நடந்தது. மறுபடியும் பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடந்தது.

இந்தத் தேர்தலில்தான் எகிப்தின் சரித்திரத்திலே அதுவரையில் கண்டும் கேட்டுமிராத ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

இதற்குமுன் பல தடவை நடந்த தேர்தல்களில் தோல்வி என்பதையே கண்டறியாத வப்துக் கட்சியினர் மேலே குறிப்பிட்ட தேர்தலில் சாதாரணமான தோல்வியல்ல, படு தோல்வி யடைந்தார்கள்.

ஏன்? திடீரென்று வப்துக் கட்சியின் செல்வாக்கு குறைந்து விடவில்லை. அக்கட்சியின் மீது ஜனங்களுக்கு இருந்த நம்பிக்கை குன்றி விடவில்லை.

நேர் முறையில் வப்துக் கட்சியைத் தோற்கடிக்க முடியாது என்பதை உணர்ந்த பிற்போக்காளர்கள் போலி முறைகளைக் கையாண்டனர். போலி வாக்காளர்களைச் சிருஷ்டித்தனர். இவ் விவரமெல்லாம் பின்னர் வெளியானதால், எகிப்து மக்களிடையே வப்துக் கட்சியின் செல்வாக்கு இன்னும் அதிகமாகியது.

இவ்வாறாக வப்துக் கட்சியின் விரோதிகளே அக் கட்சியின் செல்வாக்கு பெருகுவதற்கும் எகிப்தில் தேசிய உணர்ச்சி வளருவதற்கும் மறைமுகமாக உதவி புரிந்தனர்.



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 51. கேள்வியும் பதிலும்

**கேள்வி :**—மெல்லிய நாரால் உடலைத் தேய்த்துக் குளிக்கலாமா ?

**பதில் :**—வெறும் நாரினால் மட்டும் தேய்த்துக் குளிக்கக்கூடாது. பச்சைப்பயறு மாவு, கடலை மாவு, சீயக்காய்த் தூள் முதலியவைகளில் ஏதாவது ஒன்றைச் சேர்த்துக்கொண்டு தேய்த்துக் கொள்ளும்போது, கூட நாரையும் போட்டுத் தேய்க்கலாம்.

**கேள்வி :**—பச்சைப்பயறை மாவாக்க வறுத்துப் பொடிக்கலாமா ? பச்சையாகவே பொடிக்கலாமா ? மிஷின் இல்லாத ஊர்களில் கைத்திருகளில் போட்டுத் திருகி மாவாக்கலாமா ? இரவில் ஊற வைத்துக் காலையில் அம்மியில் அரைத்துக் கொள்ளலாமா ?

**பதில் :**—பச்சைப் பயறைச் சுத்தம் செய்து அப்படியே மாவு செய்யவேண்டும். வறுக்கக் கூடாது. சற்று நேரம் வெய்யிலில் உலர்த்தி மாவு செய்தால் நன்றாக மாவு ஆகும். மிஷினில் அரைக்க வேண்டுமென்பதில்லை. திருகளில் அரைத்தால் இன்னும் விசேஷமே. இரவில் பயறை ஊற வைத்துக் காலையில் அரைத்துத் தேய்த்தால் சிலருக்கு ஆகாது. குளிர்ச்சி அதிகமாகி மண்டையிடி, ஜலதோஷம் முதலியவை பிடிக்கலாம். சிலருக்குப் பித்தத்தைக் கிளறிவிடும். தவிர நன்றாக ஊறி மெதுவாய் இருக்குமாதலால், உடம்பில் தேய்ப்பதற்குக் கரகரவென்று இருக்காது. ஆகையால் பொடித்து வைத்துக்கொண்டு, வேண்டும்போது, அன்றாடம் சிறிது எடுத்து ஜலம் விட்டுக் கலக்கிச் செலவழித்து விட வேண்டும். மீதியை வைத்து, மறுநாள் உபயோகிக்கக் கூடாது. புளிப்பு நாற்றமெடுக்கும். சுகாதாரத்துக்கும் நல்லதல்ல. வாசனை விரும்புவோர் சந்தனத் தூளையோ நலங்குமா சாமான்களையோ அத்துடன் சேர்த்து உபயோகிக்கலாம்.

**கேள்வி :**—பல் துலக்கப் பற்பொடி நல்லதா ? எந்தப் பொடியை உபயோகிக்கலாம் ?

**பதில் :**—பல் துலக்கப் பற்பொடி நல்லதுதான். பற்களை விரலைக் கொண்டு தேய்ப்பதால், பல் ஈறுகளுக்கு மாசேஜ் கொடுத்தமாதிரி ஆகிறது. அதனால் ஈறுகள் உறுதியாய் இருக்கும். பல் வரிசை முன்னும் பின்னுமாய் வளராமல் ஒழுங்காய் வளரவும் ஏதுவாகும். ஆனால் பல் இடுக்குகளில் இருக்கும் அழுக்குகள் நீங்காது. அதற்காகக் காலையில் பல்பொடியும், இரவில் படுக்கு முன் பிரஷ்ஷையும் உபயோகிக்கலாம். எந்தப் பற்பொடி என்று சிபாரிசு செய்ய முடியாது. அவரவர்கள் இருக்கும் ஊரில் கிடைக்கும் நம்பிக்கையான பற்பொடியை வாங்கி உபயோகிக்கலாம்.

**கேள்வி :**—பல் துலக்கப் பல் பிரஷ் நல்லதா ? பல் குச்சி நல்லதா ?

**பதில் :**—பல் பிரஷுகள் எல்லாம் சமீபத்தில் ஏற்பட்டவை. அதைவிடப் பல் குச்சி நல்லது. கருவேலம், ஆல், வேம்பு முதலியவைகள் பல் இடுக்குகளில் உள்ள அழுக்கை எடுப்பதுடன், அதன் மருந்து சக்தி பல் நோய்களைத் தடுக்கிறது. ஆனால் மேற்படி குச்சி பச்சையாய்க் கிடைத்து உபயோகித்தால் நல்லது. கிடைக்காத போது, பல் பிரஷுகள் உபயோகிக்கலாம். உசிதமான பல் பசைகளையும் உபயோகிக்கலாம்.

**கேள்வி :**—தலைவலி யிருக்கும்போது ஆசனம் செய்யலாமா ?

**பதில் :**—தலைவலி, ஜுரம், வயிற்றுவலி முதலியன இருந்து கொண்டிருக்கும்போது ஆசனங்கள் செய்யக் கூடாது. செய்யவும் முடியாது. இவை எப்பொழுதும் இருக்காது. இதற்காக வழக்கமாய்ச் செய்யும் மருந்துகளைச் சாப்பிட்டுக் குணமானபின் ஆசனங்களைச் செய்து மீண்டும் வராமல் தடுக்கலாம். ஆனால் டயாபெடீஸ், ஆல்பூமின், ஆஸ்துமா, க்ஷயம், அப்பென்டிஸைடிஸ் போன்ற எப்பொழுதும் இருந்து வளர்ந்து கொண்டு வரும் வியாதிகளுக்கு ஆசனங்கள் செய்தால் தான்



உபாத்தியாயர் : — கழுதையினால் பல உபயோகங்கள் உண்டு. வண்ணானுக்குத் துணி சுமக்கும் ; பெரிய பாரங்களையும் தூக்கிவரும். இன்னும் ஏதேனும் உபயோகம் இருந்தால் சொல்லுங்கள் !

பையன் :—இன்னும் ஒன்று இருக்கிறது, ஸார் ! யாரையாவது திட்ட வேண்டும் என்றால், அதன் பெயர் உபயோகப் படுகிறது !

பரிகாரம் கிடைக்கும். ஆகையால் ஆசன நிபுணர்களிடம் ஆலோசனை கேட்டு எதெதற்கு எதைச் செய்யலாம் என்பதை அறிந்து செய்வது நல்லது.

**கேள்வி**:—ஒரு நாளைக்கு மூன்று வேளைதான் சாப்பிட வேண்டும் என்கிறீர்கள். டீ பார்ட்டி, விருந்து முதலியவைகளில் சாப்பிட வேண்டி ஏற்படுகிறதே!

**பதில்**:—பேஷாய்ப் பார்ட்டிகளிலும், விருந்துகளிலும் கலந்து கொள்ளலாம். ஆனால் அன்று இரவு பழ உணவுடன் நிறுத்திக்கொள்வது நல்லது. விருந்துகளில் சாப்பிட நேர்ந்தால் அதிக காரமான பதார்த்தங்களை விலக்கிக் காரமில்லாதவைகளையும், லேசான காரமுள்ளவைகளையும் பார்த்துச் சாப்பிடலாம்.

**கேள்வி**:—தாகம் எடுத்தால் சோடா கலர் அருந்தலாமா! அல்லது வேறு எதை அருந்தலாம்!

**பதில்**:—சோடா, கலர்கள் எல்லாம் அவ்வளவு உகந்ததல்ல. ஏதோ ஓர் சமயம் சாப்பிடுவதில் குற்றமில்லை. தாகம் எடுக்கும்போது எல்லாம் சாப்பிடக் கூடாது. அஜீர்ணப் பேர்வழிகள் சோடா சாப்பிடலாம். அதுவும் ஒரு மருந்தாக எப்பொழுதாவது சாப்பிடலாம். வழக்கமாய் எப்பொழுதும் அருந்தலாகாது. தாகத்துக்கு ஏற்றது சுத்த ஜலம்தான். அதுவும் நன்கு கொதிக்க வைத்து ஆறின ஜலமாக இருந்தால் உத்தமம். மற்றும் வெய்யில் காலமாக இருந்தால் நீர்மோர் சாப்பிடலாம். அதில் தாளிப்பதோ, உப்பு, பெருங்காயம், மிளகாய் முதலியவற்றைக் கலப்பதோ கூடாது. அப்படியே நீர்க்க சாப்பிட வேண்டும். மிகவும் ஆயாசமாக இருந்தால் சிறிது உப்பைக் கலந்து கொள்ளலாம். இளநீர் மிகவும் நல்லது. எலுமிச்சை ரஸத்தை பனங்கற்கண்டுடன் கலந்து அதிக நீர் சேர்த்துப் பானமாய் அருந்தலாம். பால், காப்பி, டீ எல்லாம் ஆகார சத்துள்ளவை. ஜீரணம் ஆவது கஷ்டம். ஆகையால் இடைவேளையில் இவைகள் எதுவும் தாகத்துக்காகச் சாப்பிடக் கூடாது.

**கேள்வி**:—குளிர்ந்த பானங்கள் சாப்பிடலாமா! ஐஸ் போட்டுச் சோடா, கலர், கிரஷ் முதலியவைகளை வெய்யில் காலத்தில் சாப்பிடலாமா!

**பதில்**:—குளிர்ந்த பானங்கள் வெய்யில் காலத்தில் சாப்பிட நன்ருய்த்தான் இருக்கும். ஆனால் அது எப்படி ஜீரணத்தைப் பாதிக்கிறது என்று தெரிந்தால் அது நல்லதா கெடுதலா என்பது விளங்கும். நமது உடலில் ஒரு அளவு உஷ்ணம் இருக்கிறது. குளிர்ந்த பானங்களோ அல்லது ஆகாரமோ சாப்பிட்டால், நமது உடலில் உள்ள உஷ்ணத்தின் அளவு குறைகிறது. உஷ்ணத்தின் அளவு குறைந்தால் ஜீரணம் தடைப்படுகிறது. ஜீரண வேலை மறுபடியும் சரிவர நடைபெற வேண்டுமானால் நமது உடலின் உஷ்ண அளவு உயர வேண்டும். மறுபடியும் நமது உடலின் அளவு சூடு ஏறின பின்தான் வழக்கப்படி ஜீரண வேலை நடக்கும். அந்தச் சூடு ஏறுவதற்கு வயிறு அதிக ஜாடராக்கினியைக் கொடுக்க வேண்டியிருக்கிறது. குளிர்ந்த பானங்கள் பருகி வயிற்றின் ஜாடராக்கினிக்கு அதிக வேலை கொடுத்துச் சதா வேலை வாங்கினால் ஜீரணம் கெட்டு விடும். ஆகையால் ஜீரண சக்தியைக் கெடுக்கக்கூடிய பானங்களை வழக்கமாய்ச் சாப்பிடுவது நல்லதல்ல. எப்பொழுதோ ஒரு தடவை மனத் திருப்திக்காகச் சாப்பிடுவதில் குற்றமில்லை. தாகம் எடுக்கும்போதெல்லாம் ஐஸ் கட்டிகளைச் சோடாவிலோ, கலரிலோ, கிரஷிலோ போட்டுச் சாப்பிடக் கூடாது. கொதித்து ஆறின ஜலத்தைப் புது மண் பானையில் விட்டு வைத்துச் சாப்பிடுவது குளிர்ச்சியாய் இருக்கும்.

**கேள்வி**:—ஆசனங்களைச் செய்து வந்து, எந்தக் காரணத்தினாலாவது இடையில் சில நாள், சில மாதம் விட்டு விட்டால், பிறகு தொடர்ந்து பழகலாமா! அப்படிச் செய்தால் கெடுதல் விளையும் என்று சொல்லுகிறார்களே!

**பதில்**.—பேஷாய்ப் பழகலாம். ஒரு கெடுதியும் வராது. அநேகர் இம்மாதிரி நினைத்து ஆசனம் செய்யாமலேயே இருந்து விடுகிறார்கள். ஆசனம் செய்வதினால் அப்படி ஒரு கெடுதலும் நிச்சயமாய் ஏற்படாது. நடுவில் ஆசனம் செய்வதை விட்டிருந்தாலும் பாதகமில்லை. பிறகும் தொடர்ந்து பழகலாம். (தொடரும்)

## சபாஷ், கிருஷ்ணசாமி!

"நாகர் தங்கசாமியா! வாருங்கள், ஸார்! வெகுநேரம் ஆக்கிவிட்டீர்களே!" என்று புதுவீடு கட்டிக் கிருஹப் பிரவேசம் செய்யும் கிருஷ்ணசாமி வரவேற்று ஆசார உபசாரத்துடன் அவருக்குச் சாப்பாடு பண்ணி வைத்தார்.

சாப்பாடு முடிந்தபின் கிருஷ்ணசாமி, "ஸார், உங்கள் உதவியை ஒரு நாளும் மறவேன். வீடு கட்ட நிலம் வாங்கிக் கொடுத்தீர்கள்; பணம் வாங்கிக் கொடுத்தீர்கள். எனக்கு வெகு நாட்களாக ஒரு கார் வாங்கவேண்டு மென்று ஆசை. அதற்கும் ஒரு ஏற்பாடு செய்து விட்டீர்களானால் நலமாயிருக்கும்" என்றார்.

"அதற்கென்ன! பேஷாகச் செய்துவிடுவோம்" என்றார் தங்கசாமி.

சில நாட்களுக்குப் பிறகு அழகிய புதுக்காரில் கிருஷ்ணசாமி, தங்கசாமியின் வீட்டுக்குப் போனார். தங்கசாமி அவரை அன்புடன் வரவேற்று, "வாருங்கள். என்ன விசேஷம்!" என்று கேட்டார்.

"ஒன்றும் இல்லை. கார் வாங்கியாகிவிட்டது. ஆனால் காரை நிறுத்த இடம் இல்லை. ஒரு 'காரேஜ்' கட்ட ஏற்பாடு பண்ணினால் நல்லது!"

"காரைப் பந்தகம் வைத்தால் 'காரேஜ்' கட்டியாயிற்று! இதற்கென்ன பிரமாதம்! ஆமாம், நிலம் வாங்கக் கடன் வாங்கினீர்கள். வீடுகட்ட நிலத்தை அடமானம் வைத்தீர்கள். கார் வாங்க நிலத்தை அடமானம் வைத்தீர்கள். 'காரேஜ்' கட்டக் காரை அடமானம் வைத்து விடுகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்புறம் கார் ஓட்டப் பெட்ரோல் வேண்டுமே, அதற்கு என்ன செய்வீர்கள்!" என்று கேட்டார் தங்கசாமி.

"என்ன சார், இது! நீங்கள் கூட இப்படிக் கேட்கிறீர்களே! நிலம், வீடு, கார், 'காரேஜ்' இவை இருக்கும் பொழுது பெட்ரோல் பங்குக்காரன் பெட்ரோல் கடனாகக் கொடுக்க மாட்டானா!" என்றார் கிருஷ்ணசாமி. இந்தப் பதிலைக் கேட்ட தங்கசாமி, "சபாஷ், கிருஷ்ணசாமி!" என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது! —ரா. வி.

# எதிர்பார்த்த கடிதம்

அக்ஷயம்

“ஏய் மருது! இன்றையத் தபால்கள் வந்து விட்டதாடா?” என்று கேட்டார் இரும்புக் கடை இருதயசாமி நாடார்.

“இன்னும் வரலீங்களே!” என்றான் மருது.

“எவ்வளவு நாழிகையடா, தபால் வருவதற்கு? சீக்கிரமாக நீயே போய்த் தபால்களை வாங்கிவாடா!” என்று உத்தரவிட்டார் இருதயசாமி நாடார்.

அவர் சொல்லி வாய் மூடுவதற்குள்ளாகவே தபால்காரன் பத்துப் பன்னிரண்டு தபால்களை அவரிடம் கொடுத்துச் சென்றான்.

இருதயசாமி நாடார் ஒவ்வொன்றாக வந்த கடிதங்களை ஆவலுடன் இப்படியும் அப்படியும் புரட்டிப் புரட்டிப் பார்த்தார். கடைசியில் ஒரு கடிதத்தின் முத்திரையைப் பார்த்ததும் அவர் முகம் மலர்ந்தது.

‘இன்றைக்கு வரவேண்டிய நாளாயிற்றே! எங்கே வராமல் இருந்து விடுமோ என்று யோசித்துக் கொண்டிருந்தேன்!’ என்று தமக்குத் தாமே முணு முணுத்துக் கொண்டு கத்திரியை எடுத்து உறையைக் கத்திரித்தார். அதைப் படித்ததும் அவருடைய மலர்ந்த முகம் இன்னும் மலர்ந்தது.

மறுநாள் காலை அவர் கடைக்கு வந்ததும் கடையின் பிரதம குமாஸ்தா பல கடிதங்களைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தார். அந்தக் கடிதங்களுடன், அவர் முதல் நாள் பார்த்த அதே கடிதமும் இருந்தது. இருதயசாமி நாடார், “இந்தக் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதும். இவற்றுக்கெல்லாம் வேண்டாம்” என்று பொறுக்கிப் பிரதம குமாஸ்தாவின் கையில் கொடுத்தார்.

பதில் எழுதவேண்டாம் என்று சொன்ன கடிதங்களில் அந்தக் கடிதமும் இருக்கவே, “முதலாளி! நாம் இந்தக் கடைக்கு எண்ணாயிரம் போய் சொச்சம் கொடுக்க வேண்டும். இவர்கள் எழெட்டுக் கடிதங்கள் எழுதி விட்டார்கள். இந்தக் கடிதம் கடுமையாக எழுதியிருக்கிறார்கள். ஒரு வார டயத்துக்குள் பணம் அனுப்பாவிட்டால் பிராது தொடுப்பார்களாம். பணம் அனுப்பி விட்டால் என்ன?” என்றார் குமாஸ்தா.

இருதயசாமி நாடார், “எல்லாம் எனக்குத் தெரியும். நீர் போய் உம் வேலையைக் கவனியும். பணமும் அனுப்ப வேண்டாம். ஒணமும் அனுப்ப வேண்டாம்!” என்று அவர்மீது எரிந்து விழுந்தார்.

பிரதம குமாஸ்தா வாய் அடைத்துத் தம் இடத்துக்குப் போய் உட்கார்ந்து விட்டார்.

இது நடந்து எழெட்டு நாட்கள் கழிந்து விட்டன. பத்து மணி இருக்கும். நாகரிகமாக ஆடை அணிந்த ஒரு வாலிபன் இருதயசாமி நாடார் கடைக்குள்ளே நுழைந்து ‘விசிட்டிங் கார்டு’ ஒன்றை நீட்டினான்.

இருதயசாமி நாடார், “வாருங்கள், உட்காருங்கள்!” என்று அவனை வரவேற்றார்.

வாலிபன், “ஸார், இது வியாபாரத்துக்குக் கொஞ்சங்கூட அழகில்லை. கிட்டத்தட்ட ஒரு வருஷமாக உங்களிடம் எண்ணாயிரம் ரூபாய்க்கு மேல் நிலுவை நிற்கிறது. நாங்கள் எழெட்டுக் கடிதங்கள் எழுதியும் நீங்கள் கிணற்றில் கல் போட்டாற் போலிருக்கிறீர்கள். இது நியாயமா?” என்று அடுக்கிக் கொண்டே போனான்.

“பதற்றப்படாதீர்கள்; பணம் எங்கும் ஓடிப் போய் விடாது!” என்று ஆறுதல் அளிக்க முயன்றார் நாடார்.

“போட்ட கடிதங்களுக்குப் பதிலையும் காணோம்; பணத்தையும் காணோம். பணம் ஓடிப்போய் விடாது என்கிறீர்களே! இன்னும் பத்து நாட்களுக்குள் பூராத் தொகையையும் கட்டவில்லையென்றால் நீங்கள் கோர்ட்டு ஏற வேண்டியதுதான்!” என்றான் வாலிபன் மிகுந்த படபடப்புடன்.

“கணக்குப் பிள்ளை, இவர்கள் கணக்கைப் பார்த்துச் ‘செக்’ எழுதிக் கொடும்” என்று சொல்லிவிட்டு இருதயசாமி நாடார் அந்த வாலிபனைப் பார்த்து, “உங்கள் பணத்தை மொற்றிவிட வேண்டும் என்ற நோக்கம் எங்களுக்கு இல்லை. எங்களுக்கும் வெளியில் நிலுவை நிறையத் தங்கிவிட்டது. வசூலிக்க வகை தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தோம். இந்தச் சமயத்தில்தான் நீங்கள் நிலுவையை வசூலிக்கக் கடிதம் எழுதினீர்கள். உங்கள் கடிதங்கள் நன்றாயிருந்ததுடன் எங்களுக்கும் சமய சஞ்சீவியாக உபயோகப்பட்டன. அவற்றை நகல் எடுத்து எங்கள் நிலுவைக்காரர்களுக்கு அனுப்பத் தொடங்கினோம். நிலுவை கனவேகமாக வசூலாகத் தொடங்கிற்று. ஆகவே, உங்கள் கடைசிக் கடிதமும் வந்தால் எங்களுக்கு உபயோகமாயிருக்குமே என்று எண்ணிப் பணம் அனுப்பாமல் இருந்தோம். இப்பொழுது நீங்களே நேரில் வந்து விட்டதால் இதுதான் கடைசிக் கடிதம் என்று தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. அப்படித்தானே?” என்று கேட்டார். வாலிபன் வியப்புடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். அதற்குள் ‘செக்’ எழுதித் தயாராக நாடாரின் கையெழுத்துக்கு வந்துவிட்டது.



மலேரியா அவனை

பாழ்படுத்திவிட்டது

'பாலுட்ரின்' இருக்கையில்

எனக்கு மலேரியாவைப்

பற்றிய பயமில்லை

நாள் கணக்கில் ஜுரமடித்துக்கொண்டிருந்தால் எத்தனை கஷ்டமாயிருக்கும்! பாவம் அவன் சக்தி முழுவதும் இழந்து வாழ்க்கையிலேயே பற்றுதல் அற்றுப்போய் விட்டான் என்றால் அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அவன் அதற்கு என்ன செய்கிறான் என்பதுதான் ஆச்சரியமாயிருக்கிறது. தினம் ஒரு மாத்திரைவீதம் 3 அல்லது 4 நாட்களுக்கு அவன் 'பாலுட்ரின்' சாப்பிட்டால் சுலபமாகக் குணமடையலாமே! மேலும் 'பாலுட்ரின்' மலேரியாவைத் தடுக்கிறது. நான் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரையை ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு தவறாமல் உட்கொள்வதால் எனக்கு மலேரியாவைப்பற்றிய பயமில்லை.



**பாலுட்ரின்***

டிரேட் மார்க்

மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

* அளவுக்கு ஒரு வில்லை

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்

IX-P 140 TM

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

உபயோகிக்கிருர்கள்...





ஒரு தனவந்தர் ப்ளு ஜில்லெட்டை விட உயர்ந்தரக பிளேடை வாங்க முடியாது. ஆயினும் இதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. இந்த புகழ்பெற்ற பிளேடுகள் நீடித்தகாலம் உழைப்பதால் ஒவ்வொரு மனிதனும் சமமான சுகபோகத்தை அனுபவிக்க முடியும். ப்ளு ஜில்லெட் பிளேடுகளையே வாங்குங்கள். (மின்சாரத்தால் கெட்டியாக்கப்பட்டும் பிரத்தியேகமாக பதப்படுத்தப்பட்டதுமான ஸ்டீலில் தயாரித்தது). உங்கள் நாகரீகமான தோற்றத்தினுல் வாழ்க்கையில் வெற்றிபெற்ற மனிதர்களிடையே நீங்களும் இடம் பெறுங்கள்.

# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணு

# பயர்ஸ்டோன் டயரின் உற்பத்தி






## உயர்ந்த ரகமான மூலப் பொருள்கள்

பயர்ஸ்டோன் டயர்கள் இணையில்லாது விளங்குவதற்கு மூலகாரணம் அதன் தயாரிப்பில் உபயோகப் படுத்தப்படும் மிகச் சிறந்த ரகமான மூலப் பொருள்களே. இந்த நம்பகமான டயர்களில் ஒரே தரமான பஞ்சு, ரப்பர் இதரப் பொருள்கள் யாவும் உற்பத்திக்கு முன் பல பரிசோதனைகளுக்குப் பிறகுதான் உபயோகிக்கப் படுகின்றன. தயாரிப்பில் தரத்தில் உயர்ந்ததே ஏற்றுக் கொள்ளப் படுகிறது. அவரவர்கள் இஷ்டத்திற்கு ஏற்றவாறு தேர்ந்தெடுக்க இருப்பினும் லக்ஷக் கணக்கான மோட்டார் சொந்தக்காரர்களும் போக்குவரத்து நிர்வாகிகளும் பயர்ஸ்டோன் டயர்களையே வற்புறுத்தி வாங்குகின்றனர்.




அதிக மைல்கள், சுகம், நாகரீகப் பாங்கு, பணத்திற்குரிய மதிப்பு ஆகிய பயன்களை பயர்ஸ்டோன் டயர்கள் வாங்கும்போது நீங்கள் அடைகிறீர்கள்.

**Firestone**

"கம் டிப்பிடு டயர் இது ஒன்றே"


SWASTIK OIL MILLS LTD
BOMBAY
777
SOAPS
சிறப்பாகவும்
சிரமமின்றியும்
சிக்கனமாகவும்
சலவை செய்கின்றன
பார்களாகவும் மிக நேர்த்தியான
கேக்குகளாகவும் கிடைக்கும்.
ஸ்வஸ்திக்கின் தொடர்ந்து வேலை
செய்யும் சோப் இயந்திரத்தில் தயா
ரிக்கப்படுகிறது. இவ்வகை இயந்திரம்
ஆசியாவிலேயே இது ஒன்றுதான்.
விற்பனை டெப்போக்கள் :
மதராஸ்
விசாகப்பட்டணம்
ஹைதராபாத் (Dn.)

# உடல் வலிமையுள்ள குதூகலமான குழந்தைகளுக்கு



உங்கள் குழந்தைக்கு கிளாக்ஸோ கொடுப்பதால் அவனுக்கு பலமுள்ள கைகால்களும், ஒழுங்கான பற்களும், திடமான சதையும் வளர உதவுகிறீர்கள். மிகவும் சிறந்த பசும்பாலிலிருந்து தயாரித்த கிளாக்ஸோவில் விடமின் 'டீ', அயம் மற்றும் ஆரோக்கியத்திற்கும், உடல் வலிமைக்கும் தேவையான சத்துக்கள் எல்லாம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தேக ஆரோக்கியத்துடன் வளருவதற்கான உணவை அளிப்பதுதான், ஒரு தாய் தன் மகவுக்குச் செய்யக் கூடிய பேருதவி.




**Glaxo**

கிளாக்ஸோ குழந்தைகளுக்கான பால் உணவு

கிளாக்ஸோ லெபரட்டரீஸ் (இந்தியா) லிட்.. பம்பாய் • கல்கத்தா • மதராஸ்

## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது




நிக்ஸோடெர்ம் கண்டு பிடிக்கப் பட்டதிலிருந்து இனி யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டிகள் ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்மினால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனுயாசமாக வைத்துக் கொண்டு, பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் கொடுக்காதீர்கள்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் கண்டு உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவிக் கொள்ளும்போது ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தைத் தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைத் தாக்கிக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷங்களில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப்போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் வேறெதையும்விட சீக்கிரமாக வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சல் ஆகியவற்றை சில நிமிஷங்களில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி — நாடிய வைத்தியம் கிடைத்ததை உணருவீர்கள். நிக்ஸோடெர்ம் ஆயிரக்கணக்கானவர்களுடைய சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார்: "பன்னிரண்டு வருஷங்களாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடெர்ம் உபயோகித்தேன். 10 நிமிஷங்களில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்திலேற்பட்ட மாறுதலைக்கண்ட என் நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாக சுத்தமாகாதவரை நிக்ஸோடெர்ம் மதிப்பை இழக்கிறது. இன்றே ஒரு நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப் படுவீர்கள். மேலும் ஒரு வாரத்திற்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் அதன் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, நீங்கள் கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே ஒரு நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கு உறுதி.

---



## உங்கள்
## சளி ஜுரத்தைக்
## குணமாக்கிக் கொண்டு
## சுலபமாக
## மூச்சு விடுங்கள்.

டாக்டர்கள் இந்த அற்புதமான
பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள்.

# PEPS



இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப் புண், இன்புளூயன்ஸா, சளி ஜுரம், மார்வலி, சுவாச கோச நோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது. சளி ஜுரம் மிகவும் ஆபத்தானது. பெப்ஸ் அதைக் குணப்படுத்தும். பெப்ஸ் மாத்திரைகளை உட்கொள்ளுங்கள். நீங்கள் மூச்சுவிடும்போது, அவற்றின் நறுமணமுள்ள மருந்துச் சத்துக்கள் உங்கள் சுவாசக் குழாய்கள் வழியாக சுவாசக் கோசங்களுக்குச் செல்லும். பெப்ஸ் எரிச்சலைப் போக்கி புண்ணையும் நோவையும் ஆற்றுகிறது. அபாயகரமான கிருமிகள் உங்களுக்கு அதிகக் கெடுதலைச் செய்யுமுன் பெப்ஸ் அவைகளைக் கொன்று விடுகிறது. பெப்ஸ் மூச்சு விடுவதை எளிதாக்குகிறது. பெப்ஸ் அற்புதமானது.

பெப்ஸ் தொண்டைப் புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள் PPY 3

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பி. டி., மதராஸ்

REGD No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*